

நம: ஸவித்ரே ஜகதேக சக்ஷுஷே
ஜகத்ப்ரஸூதி ஸ்திதிநாச ஹேதவே: ।
த்ரயீமயாய த்ரிகுணாத்ம தாரிணே
விரிஞ்சி நாராயண ஸங்கராத்மனே ॥

த்யேய: ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தி
ஸ்ரீமந் நாராயண: ஸரஸிஜாஸந ஸன்னிவிஷ்ட:
கேயூரவான் மகரகுண்டலவான் கிரீடீஹாரீ
ஹிரமண்மயவபு: த்ருத சங்க சக்ர ॥

உலகிற்கெல்லாம் ஒரு கண்ணாக விளங்குபவர் - உலகின் சிருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கு காரண புருஷர் ஆனவர், வேதஸ்வரூபி - முக்கணத்தால் மூன்று வடிவம் தாங்கி, பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளால் விளங்குபவருமாகிய சூரிய தேவனுக்கு நமஸ்காரம்.

சூரிய மண்டல மத்தியில் உறைபவர் - பத்மாசனத்தில் அமர்ந்திருப்பவர் - தோள்வளையும், காதில் மகர குண்டலங்களும், சிரசில் கிரீடமும், மார்பில் முத்துமாலையும் அணிந்தவர் - சங்கு சக்கரம் ஏந்தியவர் - பொன் திருமேனியுடையவருமாகிய ஸ்ரீமந் நாராயணன் எப்பொழுதும் தியானத்திற்கு உரியவர்.

[இந்த சுலோகத்தை காலையிலும், மாலையிலும் பக்தி சிரத்தையுடன் சொல்லி வந்தால், துன்பங்கள் விலகி, இன்பங்கள் பெருகும்.]

# ஸப்தகிரி

ஜனவரி - 1996

தனிப்பிரதி ரூ. 2

மலர் 26
இதழ் 8

சிறப்பாசிரியர் :
திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:
திரு. வி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : தசாவதார நாயகன்

முதல் உள்ளட்டை : தெப்போத்ஸவம் - ஸ்ரீகபிலேஸ்வரசுவாமி திருக்கோயில், திருப்பதி.

2-வது உள்ளட்டை :'ரத ஸப்தமி' - ஸ்ரீகோவிந்தராஜசுவாமி திருக்கோயில், திருப்பதி.

பின்னட்டை : சபரிமலை சாஸ்தா



# உங்களுடன்......

வந்து போனது தெரியாமல், 1995ஆம் ஆண்டு உருண்டோடிவிட்டது. இதோ அடுத்த ஒரு புத்தாண்டில் அடியெடுத்து வைத்துள்ளோம். பல எதிர் பார்ப்புகளுடன் புத்தாண்டில் அடியெடுத்துவைத்துள்ள ஒவ்வொருவரும், சென்ற ஆண்டில் நினைத்ததை சாதித்தோமா அல்லது ஏமாற்றங்களுடன் இந்த ஆண்டை நம்பிக்கையுடன் எதிர்நோக்கியுள்ளோமா என்பதைச் சற்றே சிந்தித்துப் பார்த் திடல் அவசியமாகிறது. சாதனை என்பது என்ன, ஏமாற்றம் என்பது என்ன என்று தெரிந்து கொள்ளாமல் இருந்தோமேயானால் எந்த ஆண்டுத்துவக்கமும் துன்பத்தின் சாயலாகத்தான் விளங்கிடும். ஒரு சொந்த வீடு கட்டிக்கொள்வது தான் நம் வாழ்க்கையின் சாதனை என்று நினைத்துக்கொண்டால், பதவி உயர்வு கிடைக்கவில்லை என்பதை ஒரு மாபெரும் ஏமாற்றமாகக் கருதிக்கொண்டால், அமைதியும் நம் வாழ்க்கையும் என்றும் ஒன்று சேரா இணை கோடுகளாத்தான் விளங்கிடும். நியாயமான ஆசையும், பரந்த மனப்பான்மையும், தேர்ந்த உழைப்பும், சிறிது தியாகம், நேர்மை, அன்பு போன்றவையே நிரந்தரமான அமைதிக்கும், ஆனந்தத்திற்கும் இட்டுச்செல்லும் சாதனங்களாகும்.

இந்து சமயம் இந்துக்களை முற்றும் துறந்த முனிவர்களாக வாழவேண் டும் என்று அச்சுறுத்தவில்லை. முற்றும் தெரிந்த மனிதர்களாக விளங்கிடவே அறிவுறுத்துகின்றது. பின்னர் ‘முற்றும் தெரிதல்’ என்றால் என்ன எனும் வினா நம்முள் எழுவது இயற்கையே. நம்மை நாம் அறிதலே முற்றும் தெரிதலாகும். அதாவது பிறவியின் நோக்கத்தை அறிந்து செயல்படுதலே மனிதனின் வாழ்க் கைப்பயனாகும். இந்தப் பயனுள்ள வாழ்க்கையை எந்த வினாடியிலிருந்து தொடங்கலாம்?! இதனால் வருவது தீமை, இவ்வாறு செய்வது நன்மை என்று பகுத்தறியும் வினாடியிலிருந்து பயனுள்ள வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய நாம், அதற்காக நாள், கிழமை, வருடம் என்று கணக்கிட்டுக் காத்திருப்பது நமது பலவீனத்தையே படம் பிடித்துக்காட்டுகிறது. ஆனால், பூத்திடும் புத்தாண்டு முதல் நாளை, ஏதோ வாழ்க்கையில் கிடைத்திடும் ஓர் அரிதான வாய்ப்பாக நாம் கொண்டிருப்பதைத் தெரிந்தும் தெரியாமல் நம்மிடையே - எண்ணிக்கொண்டு, அவ் எண்ணத்தை ஒவ்வொரு ஆண்டும் வளர்த்துக்கொண்டிருக்கிறோம். எனவே ‘புனி தத்தன்மை’ பெற்றுவரும் இப்புத்தாண்டின் முதல்நாளையாவது மேற்குறிப்பிட்ட பயனுள்ள வாழ்க்கைக்கான துவக்க வினாடியாகக் கொண்டொழுகினால்தான், அப்புத்தாண்டினை வரவேற்று மகிழ்வதில் பொருள் இருக்கும்.

வாழ்க்கையின் பயனான நம்மை நாம் தெரிந்துகொள்வதற்கு முன் நம்முள் உறையும் புனிதத்தை முதலில் புரிந்துகொள்ள வேண்டும். உள்ளம் தூய்மையா

னதாக இருந்தால், உள்ளே உறைபவனை அறிந்து இன்புறலாம். ஆம், இறை உணர்வைப் பெற்று அவ் இறைவனை கண்டு மகிழலாம். இறைமைக்குணங்கள் நம்முள் ஓங்கினால், அவ் இறைவனை எளிதில் அறியலாம். இவற்றிற்கும் நாம் அப்பரமனடிகளையே புக வேண்டும். கண்களுக்குத் தெரியாத அப்பரமனின் திருவடிகளைக் காணுவது எவ்வாறு? இறைவன் தன்னை நேரடியாக சாமான்யனுக்குக் காண்பித்துக் கொள்ளாவிட்டாலும், அதற்குத் தேவையான உள்ள பக்குவத்தை, உடல் ஆற்றலை அவனுக்குத் தந்திட, தன் சக்தியை தன்னுடைய பல அம்சங்களாக இயற்கை வழி காண்பித்திட்டான். அவ் இறைவனின் ஓர் அம்சமாக - பிரதிநிதியாக விளங்கி காலை முதல் மாலை வரை நம்மை அணு அணுவாகக் கண்காணித்துவரும் அவ் இறைச்சக்தியை நாம்தான் கண்டறியவில்லை என்பதே நமது குறை. ஆம், அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதற்கிணங்க தன் ஒளியால், வெப்பத்தால் இவ்வுலக உயிர்களை வாழவைத்துக் கொண்டிருக்கும் அச்சூர்யநாராயணனே நமது கண்கண்ட தெய்வ சக்தியாகும்.

சத்தியத்தின் பிரதிநிதியாக, நவக்கிரக நாயகனாக, வேத சொரூபியாக, ஒளி ஏற்றும் 'ஸவிதா'வாக, ஆனந்தம் தரும் 'பானு'வாக, தேவர்போற்றும் அதிதேவனாக, சௌரமதத் தலைவனாகத் திகழ்ந்து உயிரினங்களை நாளும் காத்திடும் அவ் ஆதவன் ஸ்ரீமந்நாராயணனின் அம்சமாக வானில் வலம் வந்து இன, இட, மொழி கடந்து பல்லோராலும், பன்னெடுங்காலமாக கண்கண்ட தெய்வமாகத் தொழப்பெறுகின்றான். 'ஜ்யோதிஷாம் ரவி ரம்ஸுமான்' என்று கீதை நாயகனால் புகழப்பெறும் ஞாயிறனவன் உலகத்தின் ஆத்மாவாகப் பேசப்பெறுகின்றான்.

மகாத்மா, நேரு போன்றோரின் திருவுருவங்களைப் பார்த்திடும் போதும், அவர்கள்தம் பெயர்களைக் கேட்டிடும் போதும் தியாகம், கருணை, அன்பு, உழைப்பு, நாட்டுப்பற்று போன்ற மனிதநேய உணர்வுகள் நம்முள் நம்மையறியாமல் எழுவது போன்று, அப்பகலவனைக் கண்டிடும்போது மாதவனின் மாசக்தி நமக்குப் புரிகின்றது. அன்றாட வாழ்வியலோடு விஞ்ஞான ரீதியாகவும், மெய்ஞான வழியாகவும் ஒன்றிவிட்ட 'கர்ம சாக்ஷி' யான ஆதவன் வழிபாடு பரமனின் பெருமை பேசும் ஒரு 'சக்தி' வழிபாடாகும். இச்சக்தியே நம்முள் பக்தி உணர்வினையும், ஞான மேம்பாட்டினையும் ஏற்படுத்தும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பூத்திட்ட இப்புத்தாண்டில் நம் வாழ்க்கையில் ஒரு புதுத்திருப்பம் உண்டாகவே, திசை திரும்பி ஒளிவீசிடும் நன்னாளான 'ரத ஸப்தமி' அன்று அச்சூர்யநாராயணனை வழிபட்டு நம்மை நாம் உயர்த்திக்கொள்வோமாக!



# எண்கணிதப்படி 1996 எப்படி இருக்கும்?

பராசரம் பாலசுப்ரமணியன் - திருச்சானூர்.

முன்னுரை :

சென்ற ஆண்டு ஸப்தகிரி ஜனவரி இதழைப் படித்த நேயர்கள் சிலர், தங்களுக்குப் பிறந்த நட்சத்திரமோ இராசியோ தெரியாது எனவும், ஆண்டு பலனை அறிய வேறு வழி உண்டா எனவும் கேட்டு எழுதியிருந்தார்கள். அவர்களும் மற்றவர்களும் கூட எண் கணித சாஸ்த்திரத்தின் அடிப்படையில் தங்களின் பலனை அறியமுடியும். இதற்கு உங்கள் பிறந்த ஆங்கிலத்தேதி தெரிந்தாலே போதும். எந்த மாத்தில் பிறந்தீர்கள் என்பது முக்கியமல்ல; இங்கு பிறந்த தேதியின் அடிப்படையிலே பலன் எழுதப்பட்டுள்ளது. அதில் கவனிக்கப்பட வேண்டியதொன்றுண்டு. நீங்கள் ஐந்தாம் தேதி பிறந்ததாகக் கொள்வோம். அதுவும் இரவு 12 மணிக்குப் பிறகு பிறந்ததாகக் கொள்ளுவோம். அப்பொழுது நீங்கள் ஆறும் தேதிக்குரிய பலனைத்தான் பார்க்க வேண்டும். ஏனெனில் ஆங்கிலத்தேதி இரவு பன்னிரண்டு மணிக்குப்பிறகு மாறிவிடும் அல்லவா.

இனி உங்கள் ஆண்டுப்பலனைப் படியுங்கள்.

உங்கள் அனைவருக்கும் எனது புத்தாண்டு வாழ்த்துக்கள்.

## 1, 10, 19, 28 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

அதிர்ஷ்ட தேவதையின் அருள் நிறைந்த ஆண்டாகும். நீங்கள் தொட்டதெல்லாம் பொன்னாகும். நினைத்த காரியங்கள் எல்லாம் தடங்கலின்றி நிறைவேறும். உடல்நலம் சீர்படும். சிலருக்கு வெளிநாட்டிற்குச் செல்லும் வாய்ப்பும் இவ்வாண்டு கனிந்துவரும்.

நீங்கள் சொந்தத்தொழில் செய்பவராக இருந்தால் அதில் அபிவிருத்தியும், அதிக லாபமும் காண்பீர்கள். நீங்கள் ஒருவரிடமோ ஒரு ஸ்தாபனத்திலோ வேலை செய்பவராக இருந்தால் உங்களுக்கு பதவி உயர்வு இவ்வாண்டு கிடைக்கும். சிலருக்கு பதவி உயர்வின் காரணமாக வெளியூர் மாற்றமும் உண்டு.

பணம் தாராளமாக உங்கள் கையில் நிறைந்திருக்கும். குடும்பத்தொல்லைகள் மறைந்து சுமுகமான நிலை உருவாகும். கணவன் மனைவி உறவில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். மழலைச்செல்வம் இல்லாதவர்களுக்கு அது இவ்வாண்டில் கிட்டும்.

சிலருக்கு எதிர்பாராத வகையில் சொத்துக்கள் வந்தடையும். லாட்டரி, குறுக்கெழுத்துப் போட்டி போன்ற இனங்களில் வெற்றிகிட்டும். கோர்ட்டு வழக்குகள் வெற்றியைத்தேடித்தரும். இவ்வாண்டு பல அதிசய அனுபவங்களை உங்களுக்கு வழங்க இருக்கிறது. எனினும், ஆண்டு இறுதியில் மிகவும் நெருங்கிய ஒருவரைப் பிரியும் துக்ககரமான சம்பவமும் நிகழாம்.

## 2, 11, 20, 29 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

உங்களுக்கு இவ்வாண்டு சற்று மந்தமாக இருந்து வரும். வருவாய்க்கு மேல் செலவு ஏற்படும். கடன் தொல்லைகள் அதிகமாகும். எடுத்த காரியங்கள் எதுவும் முற்றுப்பெறாது. சிறு சிறு விவகாரங்கள் கூட ரப்பர் போன்று இழுத்துக்கொண்டே போகும். துன்பத்திற்கு ஓரளவு கிடையாதோ என்னும் படி கஷ்டங்கள் வரும். ஆனால் சொந்தமாக தொழில் செய்பவர்களுக்கு நல்ல ஆதாயம் உண்டு. செல்வவாக்கு பெருகும். உங்கள் கீழ் பணிபுரியும் வேலையாட்களின் மூலம் சில தொல்லைகளுக்கு ஆளாவீர்கள். புதிதாக சில வழக்குகள் முளைக்கும். எனிலும் தொழிலில் முன்னேற்றமும் ஆதாயமும் குறையாது. வழக்கின் முடிவு உங்களுக்கு சாதகமாகவே அமையும். இவ்வாண்டின் இறுதிவாக்கில் எல்லாத் தொல்லைகளும் குறைந்து நிறைவு பெறுவீர்கள்.

அரசாங்கத்துறையில் பணிபுரிபவர்கள் பதவி உயர்வு காண்பார்கள். பணவசதியும் பெருகும். மனைவியினாலும், குழந்தைகளினாலும் மகிழ்ச்சி உண்டாகும்.

ஆண்டின் ஆரம்பத்தில் ஏற்பட்ட சங்கடங்களும், துன்பங்களும் ஆண்டு இறுதிக்குள் அகன்று நல்ல நிலை உருவாகும். குடும்பத்தில் சுப காரியங்களும் நடைபெறும்.

## 3, 12, 21, 30 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

இவ்வாண்டின் முதல் மூன்று மாதங்கள் அவ்வளவு சிலாக்கியமாகாது. குடும்பத்தில் சச்சரவு உண்டாகும். பணத்தட்டுப்பாடு இருந்துகொண்டே இருக்கும். கணவன் மனைவியரிடையே சுமுகமான உறவு நிலவாது. தொழில் மாற்றம் அல்லது பதவி உயர்வு காரணமாக வெளியூர் செல்ல வேண்டிவரும். அடுத்த மூன்று மாதங்கள் மோசமானதென்றே கூற வேண்டும். குடும்பத்தில் துக்ககரமான நிகழ்ச்சி ஒன்று நிகழலாம். பணம் கையில் தங்காது. வரவேண்டிய பணம் வந்து சேராது. எனினும் தொடர்ந்து நடந்துகொண்டிருக்கும் வழக்கில் வெற்றி காணமுடியும். உங்களுள் சிலரின் அத்தை பாட்டி போன்ற பெரியவர்களின் சொத்து எதிர்பாராதவகையில் உங்களை வந்தடையும். சீதனமும் நிறைய கிடைக்கும். மூன்றாவது மூன்று மாதமும் சற்று சுணக்கமாகவே இருக்கும். செய்யும் தொழிலில் பலவிதமான தடைகள் உண்டாகலாம். பணியாட்களின் தொந்தரவு அதிகரிக்கும். மேற்கொண்டு தொழிலை நடத்திச் செல்லுவதே கடினம் என்னும் நிலை உருவாகலாம். வீட்டிலும் பலவிதமான சிக்கல்கள் உருவாகும்.

இறுதி மூன்று மாதங்கள் மிகவும் நன்மை பயக்கும். தொழிலில் முன்னேற்றம் ஏற்பட்டு லாபம் அதிகரிக்கும். நீங்கள் நினைத்த காரியம் தங்குத் தடையின்றி ஈடேறும். பணம் தாராளமாகப் புழங்கும். குழந்தைப்பேறு கிடைக்கப்பெறுவீர்கள். குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும். பதவி உயர்வும் மேலதிகாரிகளின் ஆதரவும் கிடைக்கும்.

## 4, 13, 22, 31 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

ஒவ்வொரு காரியத்தையும் முடிப்பதற்கும் பெருமுயற்சித் தேவைப்படும். மிகுந்த நம்பிக்கையோடு செயல்பட்டால்தான் வெற்றிகாணமுடியும். எங்காவது ஓரிடத்தில் சிறு அவநம்பிக்கை ஏற்பட்டாலும், அதன் பின்விளைவு விபரீதமாக அமையும். நன்மைகளைவிட தீமைகளையே அதிகம் எதிர்கொள்ள வேண்டிவரும்.

நீங்கள் தெய்வ பக்தியை அதிகமாக வளர்த்துக்கொள்ளுங்கள். அதனால் தீமைகளும், கொடுமைகளும் பெருமளவில் குறைய வாய்ப்புண்டு. பிறரிடமிருந்து எதிர்ப்பார்க்கும் உதவியும் பெற இயலும்.

வழக்கு, விவகாரம் என்று அநாவசியமாக எதிலும் தலையிட வேண்டாம். பின்னர் துன்பப்படநேரிடும். சகோதரர், சகோதரிகளிடத்தும் சற்று இதமாகவே பழகுங்கள். இல்லையெனில் வீண் தொல்லைகள் உண்டாகும்.

இவ்வளவு கஷ்டங்களிடையேயும், உங்களுக்கு யார் மூலமாகவாவது பணம் வந்து கொண்டேயிருக்கும். எனவே பணத்தட்டுப்பாடு இருக்காது. நீங்கள் எதிர்பாராத இடத்திலிருந்தும் பல உதவிகள் வரும். இல்லற வாழ்க்கையில் இனிமை நிலவும். குழந்தைகளினால் மகிழ்ச்சி ஏற்படும். தெய்வ நம்பிக்கையாலும், இல்லறத்தில் நிலவும் நிம்மதியினாலும், வெளிவட்டாரத்தில் ஏற்பட்டுள்ள துன்பங்களை மறந்து, மன அமைதி பெறுவீர்கள்.

## 5, 14, 23 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

நீங்கள் அரசாங்கத்தில் பணி புரிபவரா? உங்களுக்கு இவ்வாண்டு மிக்க யோகமான காலமாகும். ஊதிய உயர்வு, பதவி உயர்வு எல்லாமுண்டு. விரும்பிய இடத்திற்கு மாற்றமும் உண்டு. செல்வாக்கு பெருகும். நீங்கள் இதுவரை நடந்து சென்ற தவறான நெறியிலிருந்து திருந்தி வாழப்போகிறீர்கள்.

நீங்கள் சொந்தமாக வியாபாரம் செய்பவரா? அப்படியானால் உங்கள் வியாபாரத்தை இவ்வாண்டு விரிவுபடுத்தவேண்டாம். அதனால் கடன் தொல்லைகளே மிகும். அதிக லாபம் எதிர்பார்த்து, புதிய முயற்சிகளும் செய்யவேண்டாம். அது சங்கடங்களை வரவழைக்கும்.

தனியார் துறையில் நீங்கள் பணிபுரிபவரானால் உங்களுக்கு ஊதிய உயர்வு கிடைக்கலாம். ஆனால் தொழில் செய்யுமிடத்தில் பல தொந்தரவுகள் உண்டாகும். குடும்பத்தில் அமைதி கெட வாய்ப்புண்டு. எனினும் சில நன்மைகளும் இவ்வாண்டு ஏற்படும். நிலம், வீடு ஆகிய ஆஸ்த்திகள் வாங்கிப்போடுவீர்கள். நண்பர்களும் உறவினர்களும் உதவி செய்திட முன் வருவார்கள். குடும்பத்தில் சுப காரியம் நிகழும். அதனை முன்னிட்டு அலைச்சலும், புதிதாக கடன் பெறுதலும் ஏற்படும்.

போலீஸ் இலாக்காவிலும், இராணுவத்துறையிலும் பணி புரிபவர்கள் மிக்க செழுமை காண்பார்கள்.

## 6, 15, 24 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

உங்களுக்கு எல்லாவிதத்தினி லும் மாற்றமுண்டு. அதாவது தொழிலில் மாற்றம், இடமாற் றம், குடும்ப விவகாரங்களிலும் பெரிய மாற்றம் ஏற்படும். அவ் வளவு ஏன் உடலநிலையிலும் மாற்றமேற்படும். மேற்சொன்ன மாற்றங்கள் எல்லாமே நலம் புரிபவையல்ல; நல்லதும் அல் லாததும் கலந்தே இவ்வாண்டு விளங்கப்போகிறது. உஙகள் வீட்டில் திருமணம் போன்ற சுபகாரியம் நீங்கள் எதிர்பார்க் கமலேயே நடைபெற உள்ளது. மழலைச் செல்வமும் பெறும் வாய்ப்புண்டு. பணம் கணிச மாகவே வந்து சேரும். ஏனெ னில் நீங்கள் சுபகாரியங்க ளுக்கு பணம் செலவு செய்தே யாக வேண்டும்.

நீங்கள் செய்யும் தொழிலில் வருவாய் குறைய வாய்ப்புண்டு. மேலும் தொழிலில் தகராறு களும் முளைக்கும். எனவே புதிய தொழில் செய்ய முயற் சிமேற்கொள்ள வேண்டிவரும்.

அரசாங்க ஊழியர்களுக்கு பதவி மாற்றம், ஊர்மாற்றம் நிச் சயம் உண்டு. புதிய சூழ்நி லையில் புதிய வேலையை ஏற் றுக்கொள்ளும் நிர்பந்தமும் ஏற் படும்.

உங்களின் நெருங்கிய உற வினரின் உடல்நிலை மிகவும் கவலைக்கிடமாகலாம். துக்க கரமான சம்பவமும் ஏற்ப டலாம். குடும்பத்தைவிட்டுப் பிரிந்திருக்க நேரலாம். இவ் வாண்டு இறுதிவாக்கில், குடும் பம் ஒன்றுபடும். மனத்தாங்கல் குறையும். உடல்நலம் கூடும். சிலர் புதியதாக வீடு வாங்கி குடிபுகவும் செய்வார்கள்.

## 7, 16, 25 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

நீங்கள் பணிபுரியும் இடத் தில் கவனமாக இருத்தல் நலம். இல்லையேனில் மேலதிகாரிக ளின் கோபத்திற்கு ஆளாகநே ரிடும். உங்களுக்கோ உங்கள் குடும்பத்தைச் சேர்ந்த உறவி னர்களுக்கோ வயிறு சம்பந்த மான நோய ஏற்படலாம்.

உங்கள் வருவாய் இவ் வாண்டு அதிகரிக்கும். மன அமைதி உணடாகும். ஆண் டின் மத்தியில் மேலதிகாரிகள் உங்கள் மேலகொணட கோபம் நீங்கப்பெற்று, அவர்களின ஆத ரவையும் பெறுவீர்கள். பதவி உயர்வுக்கும் சிபாரசு செய்யப்ப டுவீர்கள். புதிய வாகன சௌக் கியமும் உண்டாகும்.

வியாபாரத்தில் உள்ள நீங்கள், இவ்வாண்டு அதிகம் லாபம் அடைவீர்கள் என எதிர்ப்பார்க் கவேண்டாம். நீங்கள் வாங் கும் பொருட்களுக்குத் தட்டுப் பாடு ஏற்படலாம். அவ்வளவு ஏன், அரசாங்கமும் அதற்கு கட் டுப்பாடு விதிக்கலாம். ஆகையி னால் உங்கள் வியாபாரம் பெரு மளவில் பாதிக்கப்படலாம். நீங் கள் தனியாகச் செய்யும் வியா பாரத்தை விடுத்து நம்பிக் கைக்குரிய நண்பர்கள், உறவி னர்கள் ஆகியவர்களுடன் கூட் டாக வியாபாரம் செய்வீர்களா யின் நல்ல லாபம் காண்பீர்கள்.

எதற்கும் உணர்ச்சிவசப்படா தீர்கள். எதிலும் நிதானமாகச் செயல்படுங்கள். தீர ஆலோ சித்து முடிவெடுக்க வேண்டும். உங்களில் சிலர் குழந்தைப்பாக் கியத்தை பெறுவீர்கள். பெண் களினால் சில தொல்லைகளை யும் நீங்கள் சந்திக்க வேண்டி வரும். தெய்வ காரியங்களில் ஈடுபடுவதின் மூலம் மனஅமை தியும், பணவரவும் பெறலாம்.

## 8, 17, 26 தேதிகளில் பிறந்தவர்களுக்கு

நீங்கள் திருமணமாகாதவரா? விரைவிலேயே திருமணம் கைகூ டும். நீங்கள் வெளிநாட் டுப் பயணத்தை வெற்றிகரமாக முடிப்பீர்கள். உடல் ஆரோக் கியமாக இருக்கும். செய யும் தொழிலில் முன்னேற் றமுண்டு. பழைய நண்பர்கள் உங்களைவிட்டு விலகிவிடுவார் கள். இருந்தாலும். உங்கள் தொழிலின் முன்னேற்றத்திற்கு உதவிட சில புதிய நண்பர்க ளைப் பெறுவீர்கள்.

உங்கள் சொத்து விஷய மாக சில சிக்கல்கள் உருவாகும். கோர்ட்டில் வழக்கு போடுமள விற்கு அச்சிக்கல்கள் வளர்ச்சிய டையும்.

குடும்பத்தில் வீண் செலவு கள் அதிகரிக்கும். அது தவிர்க்க முடியாததாகவும் இருக் கும். மாணவர்கள் கல்வியில் கவனம் கொள்ளவேண்டும்.

வங்கி, வட்டி, வியாபாரம் செய்பவர்கள் ஓரளவு நன்மை பெறுவார்கள்.

கல்வி நிறுவனங்களை நடத் துபவர்கள் 'நல்ல முன்னேற்றம் காண்பார்கள்.

ஆசிரியர் தொழிலிலும், நீதித் தொழிலிலும் ஈடுபட்டுள் ளவர்கள் அபிவிருத்தி காண் பார்கள்.

அரசியலில் ஈடுபட்டுள்ளவர் கள் சில சங்கடங்களை எதிர்க் கொள்ள வேண்டிவரும்.

கணவன் மனைவி உறவில் சுமுகமான சூழ்நிலை நில வும். உங்களில் சிலர் தங்களின்

மனைவியின் பெயரில் செய்யும் முதலீடும், வாங்கும் பங்கு பத்திரங்களும் அதிக லாபத்தை ஈட்டித்தருவதாக அமையும்.

### 9, 18 தேதிகளில்

#### பிறந்தவர்களுக்கு

இவ்வாண்டு சில நல்ல சந்தர்ப்பங்கள் உங்களைத் தேடிவரவிருக்கிறது. அதனை நழுவவிடாதீர்கள். உங்கள் வாழ்க்கையில் Turning Point என்பார்களே அப்படி ஒரு திருப்பம் உண்டாகவிருக்கிறது. குடும்பத்தில் குதூகலம் நிலவும். செய்யும் தொழிலும் நன்கு அபிவிருத்தியடையும். எனினும் அவ்வப்போது பணத்தட்டுப்பாடு இருந்துதான் தீரும். சில சந்தர்ப்பங்களில் மனக்குழப்பம் அடையுமளவிற்கு சில நிகழ்ச்சிகள் நடைபெறலாம். கவலைதரும் சம்பவங்களும் நிகழும். எனினும் மனம் தளராது, கடமையுணர்வுடன் உழைத்தால் இறுதியில் வெற்றி நிச்சயம் உண்டு.

முடிந்த அளவிற்கு பிறருடன் தகராறுகள் வைத்துக்கொள்ள வேண்டாம். புதிய வழக்குகளிலும் ஈடுபடாதீர்கள். லாட்டரியில் பணம் செலவழிக்க வேண்டாம். ஏனெனில் இவ்வாண்டு உங்களுக்கு அதில் யோகமில்லை. வெளியூர் பயணம் மேற்கொள்ளும்போது கவனமாக இருக்கவும். பலவிதமான இடையூறுகளைச் சந்திக்க வேண்டிவரும். சில சமயம் உயிருக்கு ஆபத்தான நிலைமையும் ஏற்படலாம்.

ஆண்டின் இறுதியில், வெளிநாட்டுப் பயணம் மேற்கொள்ளுவீர்கள். மாணவர்கள் உதவித்தொகைப்பெற்று மேற்படிப்பிற்காக வெளிநாட்டிற்குச் செல்ல இவ்வாண்டில் காலமும் சந்தர்ப்பமும் கனிந்துவருகிறது. இனிமை நிலவும். மன அமைதி கணவன், மனைவி உறவில் அடையப்பெறுவீர்கள்.



## வாராந்திர சேவைகள் மற்றும் உத்ஸவங்கள்

| | |
|---|---|
| 1) சிறப்பு பூஜை | (திங்கட்கிழமைகளில்) ரூ. 3000/- காலை 6-00 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 5 பெரிய லட்டுகள், 5 வடைகள். |
| 2) அஷ்டதளபாத பத்மாராதானா சேவை : | (செவ்வாய்க்கிழமைகளில்) ரூ. 3500/- காலை 5-30 மணிக்கு. 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். |
| 3) ஸகஸ்ர கலஸாபிஷேகம் | (புதன்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், புளியோதரை, பொங்கல், சர்க்கரைப் பொங்கல், பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு. |
| 4) திருப்பாவாடை | (வியாழக்கிழமைகளில்) ரூ. 5000/- காலை 5-30 மணிக்கு. 6 நபர்கள் அனுமதிக்கப் படுவர். அன்பளிப்பு : வஸ்த்ரம், 7 பெரிய லட்டுகள், 7 வடைகள் 5 அப்பங்கள், 5 தோசைகள், 5 தேன் துளைகள், புளியோதரை, பாயசம், (ஒவ்வொன்றும் 1/32 சோலா அளவு.) |
| 5) அபிஷேகம் | (வெள்ளிக்கிழமைகளில்) காலை 3-30 மணிக்கு<br>(அ) பூராபிஷேகம் : ரூ. 750/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 2 சிறிய லட்டு, 2 வடைகள்.<br>(ஆ) புனுகுப்பாத்திரம் : ரூ. 300/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை.<br>(இ) கஸ்தூரிக்கிண்ணம் : ரூ. 150/- (ஒவ்வொருவருக்கும்) அன்பளிப்பு: 1 சிறிய லட்டு, 1 வடை. |

குறிப்பு :

(1) வரிசை 1 முதல் 4 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே பதிவு செய்து கொள்ளலாம்.

(2) கிடைத்திடும் சீட்டுகளைப் பொறுத்து, ஒரு வருடத்திற்கு முன்பேயே அபிஷேகத்திற்கு முன்பதிவு ஏற்றுக்கொள்ளப்படும்.

லட்டு படி

ஆர்ஜிதம் பெரிய லட்டு படி - ரூ. 2500/-
சிறிய லட்டு படி - ரூ. 750/-

சீட்டு வாங்கிய பக்தரைச் சார்ந்த மொத்தம் ஐந்து நபர்களுக்கு ஏழுமலையான் தரிசன வசதி செய்து தரப்படும். தரிசனத்திற்குப் பிறகு 30 லட்டுகள் வழங்கப்படும்.

# 1996-ம் ஆண்டு உங்களுக்கு எப்படி இருக்கும்?

பராசரம் பாலசுப்ரமணியன் - திருச்சானூர்.

## மேஷம்

(அஸ்வினி, பரணி மற்றும் கிருத்திகை முதல் பாதம்)

இவ்வாண்டு பிப்ரவரி முதல் உங்கள் இராசிக்கு பன்னிரண்டில் சனி பகவான் உலவுகிறார். இது உங்களுக்கு ஏழரையாண்டுச் சனியின் தொடக்கக்காலமாகும். பன்னிரண்டாம் இடத்தை விரயஸ்தானம் என்பார்கள். அங்குள்ள சனியை விரயச் சனி என்பர். இவ்விரயச் சனியின் கெடுபிடி கொஞ்சநஞ்சமல்ல. சிலர் தங்களின் உறவினர்களின் பிரிவை அடைய நேரிடும். அறநெறி தவறியவர்கள் சிறைப்படவும் நேரிடும். சிலரை வறுமை வாட்டும். கணவன் மனைவி உறவினில் கருத்து வேறுபாடு காரணமாக விரிசல் உண்டாகலாம். சிலரின் பிதுரார்ஜித சொத்து கை நழுவிப்போகலாம். உதவிகள் தக்கச் சமயத்தில் கிடைக்காது. ஏமாற்றமடைய நேரிடலாம். கேதுவும் சனியுடன் இணைந்து உலவுகிறார். வியாதியும் வீண் செலவும் வாட்டும். செய்யும் தொழிலில் சிக்கல்கள் உண்டாகும் பிரயாணத்தில் சங்கடங்கள் உண்டாகும். என்றாலும், உங்கள் இராசிக்கு ஆறில் உலவும் இராகுவும் ஒன்பதில் சஞ்சரிக்கும் குருவும் கைகொடுக்கக் காத்திருக்கிறார்கள். திருமணம் காணாது தவிப்பவர்கள் மணம் கண்டு மகிழ்வார்கள். வீடு, மனை, பூமி போன்ற ஆஸ்த்திகள் வாங்குவீர்கள். மழலைச் செல்வம் பெறுவீர்கள். உத்தியோகத்தில் உயர்வு காண்பீர்கள். உங்கள் செல்வாக்கு ஓங்கும். புத்ர, புத்ரிகளால் சுப விரயங்களும் உண்டு. அதனால் ஏற்படும் அலைச்சலும் உண்டு. உடல் நலம் சீர்படும்; மணவளம் பெருகும். அயல்நாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். சிலருக்கு வெளிநாட்டிற்குச் செல்லும் யோகமும் கூடிவரும். ஒப்பந்தம் போன்ற வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் செழுமைக் காண்பார்கள். மாணவர்கள் தேர்வில் வெற்றி பெறுவார்கள்.

## ரிஷபம்

(கிருத்திகை 2, 3, 4 பாதங்கள், ரோகிணி மற்றும் மிருகசீர்ஷம் 1, 2 பாதங்கள்)

உங்கள் இராசிக்கு எட்டில் குரு உலவுகிறார். இது சிலாக்கியமன்று. உடல் நலக்குறைவு ஏற்படலாம். பிரயாணத்தில் மனக்கிலேசம் உண்டாகும். உறவினர்கள் நண்பர்கள் ஆகியோரின் பிரிவு ஏற்படலாம். புதிய புதிய செலவினங்களை ஏற்கவேண்டிவரும். செய்யும் தொழிலில் தடைகள் சங்கடங்கள் உண்டாகலாம். சிலருக்கு அபகீர்த்தி ஏற்படலாம். ஆனாலும் தேவைக்கேற்ற பொருள் வசதி உண்டாகும். மனைவியின் மூலம் வாகனம் அல்லது ஆஸ்தி அடையக்கூடும். மாணவர்கள் அறிவு வளர்ச்சிப்பெற்று தேர்வில் வெற்றி காணபார்கள். குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். இராகுவின் ஐந்துவிதமான நஷ்டத்தையும் சேதத்தையும் உண்டாக்கும் என்றாலும் உங்கள் இராசிக்கு பதினொன்றில் உலவும் கேதுவும் சனியும் மிகுந்த நன்மைகளை வழங்க இருக்கிறார்கள். எட்டில் சஞ்சரிக்கும் குருவினால் ஏற்படும் மனச்சஞ்சலங்கள், பதினொன்றும் இடத்துச் சனியினால் பெருமளவு குறையும். ஆயுள் காப்பீட்டிடம் பெருந்தொகை எதிர்ப்பார்த்திருப்பவர்கள், அதனை அடையப்பெறுவீர்கள். பென்ஷன் வந்தடையாது தவிப்பவர்கள் விரைவிலேயே அதனைப்பெற்று மகிழ்வார்கள். மக்கள் மத்தியில் செல்வாக்கு உயரும். உங்களில் சிலருக்கு பிறரின் பொருள் கைக்கு வந்து சேரும். அந்நியப் பெண்களின் மூலம் லாபம் அடைவீர்கள். வேலையாட்கள் உங்கள் குறிப்பறிந்து வேலைகளைச் செய்து உங்களுக்கு மனநிறைவை ஏற்படுத்துவார்கள். நீங்கள் நினைத்த காரியம் கைகூடும். பலராலும் போற்றக் கூடிய நிலை உருவாகும். தற்காலிகமாக வேலை செய்பவர்களுக்கு அவ்வேலை நிரந்தரமானதாக உறுதி செய்யப்படும்.

## மிதுனம்

(மிருகசீர்ஷம் 3, 4 பாதங்கள், திருவாதிரை மற்றும் புனர்பூசம் 1, 2, 3 பாதங்கள்)

உங்கள் இராசிக்கு நான்கில் ஏற்படும் இராகுவின் சஞ்சாரம் சிலாக்கியமாகாது. வயிறு சம்பந்தமான கோளாறுகள் உண்டாகலாம். சிலருக்கு இரத்தப்

போக்கு, உடல்வலிமை குன் றுதல் ஆகியன ஏற்படலாம். எதிரிகளின் தொல்லை, பணவி ரயம், ஆஸ்தி விஷயமாக குடும் பத்தில் வாக்குவாதம் முற்றி பல விதமான நஷ்டங்களும் உண்

டாகலாம். எனினும் கேதுவும் சனியும் பத்தாமிடத்தில் சஞ்ச ரிக்கும் காலமல்லவா. பொருள் வரவு உண்டு. முயற்சிக்குத் தக்க பலனும் உண்டு. சிலர் புதிய சூழ்நிலையில் புதிய உத் தியோகத்தை ஏற்க வேண்டி வரும். வடமேற்கு திசையிலி ருந்து நற்செய்தி வரும். கமி ஷன் ஏஜென்ஸி, பங்கு வியா பாரம் மற்றும் வாகனத்தைக் கொண்டு வியாபாரம் செய் பவர்கள் கணிசமாக ஆதாயம் கிடைக்கப்பெறுவீர்கள். உங்க ளில் சிலர் தங்களின் மனை வியின் செய்கையினால் புதிய கடன் தொல்லைக்கு ஆளாகு வீர்கள். வெளிநாட்டுப் பய ணம் ஆக்கம் தரும். இதைவி டச் சிறப்பு என்னவெனில் குரு வின் ஏழாம் இடத்துச் சஞ் சாரம்தான். உங்கள் இரா சிக்கு ஏழுக்குடைய குரு பக வான் ஏழில் தனது சொந்த வீட்டில் உலவும் இவ்வாண்டு, உங்களுக்கு மிகவும் யோகமான காலம், பணவசதியும் பாராட் டுக்களும் குவியும். பிரயா ணம், கடிதத்தொடர்பு மிகவும் அனுகூலமாக இருக்கும். திரும ணபாக்கியம் கைகூடும். மழ லைச் செல்வமும் பெற்று மகிழ் வீர்கள். கணவன் மனைவி உறவில் ஒற்றுமை ஓங்கும். கூட்டு வியாபாரம் செய்பவர் கள நலம் பல காண்பீர்கள். தொழில் சிறக்கும். உத்தியோக உயர்வு பெறுவீர்கள். வீட் டில சுபகாரியங்களை நடத்து வீர்கள். மாணவர்களின் மேல் படிப்பிற்கான முயற்சி வெற்றி பெறும். சிலர் உதவித்தொகைப் பெற்று மேல்படிப்பிற்காக வெளி நாடு செல்வீர்கள். மொத்தத்தில் இவ்வாண்டு உங்களுக்கு மிகச் சிறந்த ஆண்டாக அமைகிறது.

### கடகம்

(புனர்பூசம் நான்காம் பாதம் பூசம், மற்றும் ஆயில்யம்)

ஒன்பதில் உலவும் கேது சில தொல்லைகளை உங்களுக்கு வழங்குவார். காரிய நஷ்டம் பலவிதமான பீடைகளை உண் டாக்குவார். சிலருக்கு விஷ ஜந்துக்களினால் ஆபத்துக் களை உண்டாக்குவார். உங்கள் இராசிக்கு ஒன்பதில் உலவும் சனியும் வீண் சிரமம், வியாதி, விரோதம் ஆகிய விரும்பத்த காதனவைகளை உருவாக்குவார். எனினும் கடன்தொல்லைகளை விலக்குவார். வழக்கு வியாஜ்ஜி யம் ஆகியவற்றில் சுமுகமான சூழ்நிலையை உண்டாக்குவார். உங்கள் இராசிக்கு யோகக்கார ரான குருவின் ஆறும் இடத் துச் சஞ்சாரமும் நன்மை பயப் பதாக இல்லை. நண்பர்களின் மற்றும் உறவினர்களின் விரோ தத்தை வளர்ப்பார். குடும்பத் தில் சிக்கல்களை உண்டாக்கு வார். பணம் வீணுகச் செல வழியும். உங்களில் சிலர் பல வழிகளில் ஏமாற்றப்படுவீர்கள். வியாதியினால் அவதிப்பட நேரிடும். குரு ஆறில் வந் தபோது சத்தியமாமுனி இரு கால்களில் விலங்கு போடப் பட்டார் எனப் பழல் பாடல் கூறுகிறது. எனவே சிலர் செய்யத்தகாதனச் செய்ததால் சிறையில் வாட வேண்டிவரும். உங்களில் சிலர் கடத்திச் செல் லப்படவாய்ப்புண்டு. இருந்தா லும் சில சிறப்பு விதிகளின்படி நோக்கும்போது, நன்மைகளும் விளையக்கூடும். தொழில் ஏற்ப டும் சிறு சிறு சலனங்கள் பெரி தாக உங்களைப் பாதிக்காது. தொழிலை முன்னிட்டு நீங்கள் கடன்பெற வேண்டிவரும். சில ருக்குச் செல்வாக்கு உயரும். உங்களில் சிலர் புதிய வேலை களை ஏற்கப்போகிறீர்கள். எனி னும் இவ்வாண்டு முழுதும் உங்களுக்கு எதிலும் ஒரு அதி ருப்தியே நீடிக்கும். அழகிய மனைவியின் முகமும்கூட உங்க ளுக்கு வெறுப்பை வளர்க்கலாம். மூன்றும் இடத்து இராகுவின் சஞ்சாரம் சற்று நிம்மதியைத் தரும் என்றுலும் உங்களுக்கு இவ்வாண்டு ஒரு சோதனை மிக்கதாகவே அமையும்.

### சிம்மம்

(மகம், பூரம் மற்றும் உத்திரம் முதல் பாதம்)

உங்கள் இராசிக்கு இரண் டில் உலவும் இராகு மிக வும் பொல்லாதவர். நீங்கள் பேசும் வார்த்தைகள் நிதானத் துடனும் பொறுப்புடனும் இல் லையெனில் மிகுந்த சங்கடத் திற்கு ஆளாவீர்கள், குடும் பத்தில் சச்சரவு மன அமைதி இன்மை உண்டாகும். எட்டில் சஞ்சரிக்கும் கேதுவும், சனி யும் எல்லாவிதத்திலும் உங்கள் காலை வாரிவிட இருக்கிறுர்கள். பகைவர்களின் தொல்லை, ஆயு தங்களினால் காயம், வீஷபீடை மற்றும் க்ஷயரோகம் முதலியன உண்டாகலாம். அஷ்டமத்துச் சனி வாட்டுகிறது என்பார்கள். இது முற்றிலும் உண்மையே என்பதை உணரும் காலமிது. மனைவி மக்களைப் பிரிந்து வாழும் நிலை உருவாகும். மிகவும் விரும்பத்தகாத தாழ் மையான நடத்தையில் உழல் வீர்கள். நெருங்கிய உறவி னர்களின் துயரச்செய்தி வந் தடையும். தொழில் நிறுவன

அதிபர்களும், பல வேலையாட்களைப் பணிக்கு அமர்த்தித் தொழில் செய்பவர்களும் தங்கள் வேலையாட்களின் மூலமாகப் பல தொல்லைகளுக்கு ஆளாவார்கள். எனினும் உங்கள் இராசிக்கு ஐந்தில் உலவும் வியாழ பகவான் சற்றே நிம்மதியாக மூச்சுவிடவைப்பார். எதிரிகளின் தொல்லை ஓரளவு மறையும். மனத்தெளிவு உண்டாகும். புண்ணிய ஸ்தல யாத்திரை மேற்கொள்வீர்கள். புதிய தொழிலில் ஈடுபடும் வாய்ப்பும் உண்டாகும். தசாபுக்திகள் சாதகமாக உள்ளவர்கள் மணம் காணப்பெறுவீர்கள். குழந்தைப்பாக்கியமும் உண்டாகும். குடும்பத்தில் குதூகலம் நிலவும். கோர்ட்டு வழக்குகளில் வெற்றி வாய்ப்பு கூடும். சிலருக்கு புதிய வீடு கட்டும் யோகமும் உண்டு. நண்பர்களின் உதவிதக்கச் சமயத்தில் வந்தடையும். இவ்வாண்டு சற்றுத் துயரம் மகிழ்ச்சியும் கலந்த ஆண்டாக அமையும்.

## கன்னி

(உத்திரம் 2, 3, 4 பாதங்கள், ஹஸ்தம் மற்றும் சித்திரை 1, 2 பாதங்கள்)

உங்கள் இராசியில் இராகுவின் சஞ்சாரத்துடன் இவ்வாண்டு தொடங்குகிறது. வீணாக அலைய வேண்டிவரும். ஆயுதத்தினால் பீடை, வாயு பீடை மற்றும் விஷ பீடை முதலிய உண்டாகும். சிலர் அவமானப்பட நேரிடலாம். ஏழில் உலவும் கேதுவோ பலவிதமான துன்பங்களையும், சிறைப்படுதலையும் உண்டு பண்ணுவார். நான்காம் இடத்தில் உலவும் குரு கடன், நோய் ஆகியவற்றில் சற்று நிவாரணமளிப்பார். கொடுக்கல் வாங்கல் வியாபாரத்தில் மேன்மைபெற இயலும். சிலர் தெய்வீகக் காரியங்களில் ஈடுபடுவீர்கள். விரைவிலேயே வெளிநாடு செல்லுவீர்கள். தரும புத்திரரின் ஜாதகப்படி நான்கில் குருவந்தபோது, வனவாசம் செல்லும்படி நேரிட்டது என்பார்கள். எனவே உங்களில் சிலர் குடும்பத்தைப் பிரிய நேரிடலாம். ஆனாலும் ஒரு சில காலக்கட்டத்தில் தனப்ராப்தியும் இவ்வாண்டு உங்களுக்கு ஏற்படும். அடுத்து சனி பகவானின் ஏழாம் வீட்டுச் சஞ்சாரமும் சிறப்பானதன்று. உடல் ஒளி குன்றும். சிலர் பேய் பிசாசு போன்ற பாதைகளினால் துன்புறுவார்கள். மர்ம வியாதிகளினால் பீடிக்கப்படுவார்கள். கணவன், மனைவி உறவில் விரிசல் காணும். சிலர் குடும்பத்தை விட்டு விலக நேரிடலாம். உறவினரின் சோகச் செய்தி நெஞ்சை உலுக்கும். உறவினர்களிடையே விரோதம் வளரும். திருமண முயற்சி தடைப்படும். மூட்டு வலி, வாயுத்தொல்லை மிகும். கூட்டு வியாபாரத்தில் பங்குதாரர்களின் தொல்லைகள் அதிகமாகும். சிலருக்கு வயிறு சம்பந்தமான நோய்கள் உண்டாகலாம். புது முயற்சிகள் வெற்றியளிக்காது. மொத்தத்தில் இது உங்களுக்கு சற்றே சோதனை மிக்க ஆண்டேயாகும்.

## துலாம்

(சித்திரை 3, 4 பாதங்கள், ஸ்வாதி மற்றும் விசாகம் 1, 2, 3 பாதங்கள்.)

உங்கள் இராசிக்கு பன்னிரண்டில் இராகுவும், ஆறும் இடத்தில் கேதுவும் சஞ்சரிக்கும் நிலையில் இவ்வாண்டு ஆரம்பமாகிறது. பன்னிரெண்டில் உலவும் இராகு சரீரகாந்தி, கௌரவம், திறமை ஆகியவற்றை நாசமாக்குவான். ஆறில் உலவும் கேது லக்ஷ்மீ கடாட்சத்தை வழங்குவார். எதிரிகளின் தொல்லைகளை அழிப்பார். வழக்கில் வெற்றி வாகைச் சூடச் செய்வார். பிறரிடம் எதிர்பார்க்கும் பொருளை எளிதில் கிடைக்கச்செய்வார். ஆனாலும் சிலர் கண் வியாதியினாலும், பித்த சுரத்தினாலும் அவதிப்படநேரிடும்.

மூன்றில் உலவும் வியாழனால் அலைச்சலும், குழப்பமான மனநிலையும், காரியத் தாமதமும், பயனற்ற பயணமும், மறைமுக எதிர்ப்பும், எதிலும் ஒருவிதமான சோம்பலும், அசதியும் நிறைந்ததுமான வாழ்க்கையும் உண்டாகும். உத்தியோகத்திலிருப்பவர்கள் சக ஊழியரிடத்தும், மேலதிகாரிகளிடத்தும் கவனமாக நடந்துகொள்ள வேண்டிவரும். மூன்றில் குருவந்தபோது, துரியோதனன் படை அழிந்தது. அதாவது உறவினர்களின் பிரிவு ஏற்படும் என்பது பொருளாகும். எனினும் குருவின் பார்வையினால் திருமணத்தடை விலகி, நல்ல மணவாழ்க்கை அமையும். வெளிநாடு செல்லும் வியாபாரிகளும் படிப்பிற்காக வெளிநாடு செல்லும் மாணவர்களும் ஆதாயம் பெறுவார்கள். சனி பகவானின் ஆறும் இடத்துச் சஞ்சாரம் மிகவும் நன்மை பயக்கும். எதிரிகளின் தொல்லை குறையும். நோயிலிருந்து நிவாரணம் காண்பீர்கள். கோர்ட்டு விவகாரங்கள் வெற்றி தரும். சாதகமான தசாபுத்தி நடைபெறும் ஜாதகர்கள், தேர்தலில் வெற்றி வாகைச் சூடுவார்கள்.

## விருச்சிகம்

(விசாகம் நான்காம் பாதம், அனுஷம், மற்றும் கேட்டை.)

சென்ற ஆண்டு பொருளாதார நெருக்கடி, வீண் அலைச்சல், காரியத்தடை உறவினர்கள் காணுல் போதல் ஆகியவற்றைச் சந்தித்திருப்பீர்கள். இவ்வாண்டும், உங்கள் இராசிக்கு ஐந்தில் உலவும் கேதுவும் சனியும் உங்களைப் பல தொல்லைகளுக்கு உள்ளாக்குவார்கள். உங்கள் குழந்தைகளை முன்னிட்டு மனச்சங்கடம் உருவாகும். நீங்கள் வசிக்குமிடத்தில் சிக்கல்கள் உருவாகலாம். செய்யும் தொழிலில் தொல்லைகள் உண்டாகும். பயணங்களில் இடையூறுகள் பல உண்டாகலாம். புதியதாக ஆரம்பிக்கப்படும் எந்த காரியத்திலும் தடைகள் நேரிடும். சொந்த உறவினர்களின் மனஸ்தாபத்தை அடைய வேண்டிவரும். புதிய வழக்குகள் தோன்றும். சனி உங்கள் ராசிக்கு மூன்று, நான்காம் இடங்களுக்கு அதிபதியாவர். ஆகையால் இளைய சகோதரர்கள் மூலமாக வியாஜ்ஜியங்கள் உண்டாகலாம். எனினும் இரண்டில் உலவும் குருவும், பதினொன்றில் சஞ்சரிக்கும் இராகுவும் பல நன்மைகளை வாரி வழங்க இருக்கிறுர்கள். உங்கள் பணவசதி பெருகும். குடும்பம் செழிக்கும். தொழில், உத்தியோகத்தில் எதிர்பாராத நன்மைகள் விளையும். கணவன் - மனைவி உறவில் ஒற்றுமை சிறக்கும். நண்பர்கள் உதவிக்கரம் நீட்டுவார்கள். தடைப்பட்டு வந்த திருமணம் மகிழ்ச்சிகரமாக முடியும். உங்கள் செல்வாக்கும் உயரும். பிற பெண்கள் உங்களுக்கு பலவிதத்திலும் உதவ முன்வருவார்கள். பலராலும் பாராட்டப்படுவீர்கள். சிலர் புதிய பதவியை அடையும்பாக்கியம் பெறுவீர்கள். உத்தியோகம் இன்றித் தவிப்பவர்களுக்கு வேலை கிடைக்கக்கூடும். மாணவர்கள் நினைவாற்றல் வளர்ச்சிபெற்று போட்டித் தேர்வுகளில் வெற்றி காண்பார்கள். சிலருக்கு பதவி உயர்வு காரணமாக இடமாற்றம் ஏற்படவும் வாய்ப்புள்ளது.

## தனுசு

(மூலம், பூராடம் மற்றும் உத்திராடம் முதல்பாதம்)

உங்கள் இராசிக்கு நான்கில் கேதுவும் சனியும் சஞ்சரிக்கும் காலமிது. இதனை சிறப்பாகக் கருத இடமில்லை. நண்பர்கள், மனைவி, தனம் ஆகியவையினால் சங்கடங்கள் ஏற்படும். தாய் நலம் சீர் கெடும். மனம் தீயவழியில் செல்ல வாய்ப்புண்டு. மாணவர்கள் சோதனையான கட்டத்தில் உழலும் நிலை உருவாகலாம். வீடு, மனை போன்ற நிலையான சொத்துக்களின் மூலம் தகராறுகள் உண்டாகலாம். பண விரயமும் உண்டு. வாகனம் அடிக்கடி பழுதுபட நேரிடும். உங்கள் இராசி நாதனாகிய குரு இவ்வாண்டு முழுவதும் தனுசுவிலேயே சஞ்சரிக்க உள்ளார். ஜென்ம இராசியில் குருவின் சஞ்சாரம் பொது விதிப்படி சிறப்பன்று. காரியத்தடை, வீண் அலைச்சல், பொருளாதார நெருக்கடி முதலியன ஏற்படலாம். ஸ்ரீஇராமபிரான் ஜன்ம இராசியில் குரு வந்தபோது, இராவணன் சீதாபிராட்டியை சிறை வைத்தான் எனக் கூறுகிறது பழம் பாடல் ஒன்று. அதாவது மனைவி, குடும்பம் இவற்றின் பிரிவை அடைய நேரிடும் என்பது பொருள். ஆனாலும் தனுசு குருவின் சொந்த வீடாகும். சிறப்புவிதியின்படி நன்மைகள் வழங்கக்கூடமைப்பட்டவர். பூர்விக சொத்துக்களும், புதிய ஆஸ்த்திகளும் வந்து சேரும். மனத்தெளிவு உண்டாகும். தெய்வ காரியங்கள், புனித யாத்திரை, வெளி நாட்டுத் தொடர்பு ஆகியன அனுகூலமாகும். பங்கு வியாபாரத்தில் நல்ல இலாபம் பெறமுடியும். மண வாழ்க்கையைப் பெறும் பாக்கியம் கனிந்து வரும். தந்தையினால் அனுகூலம் உண்டு. ஆன்மீக வாழ்க்கையில் ஈடுபட விரும்புகிறவர்கள் குரு உபதேசம் கிடைக்கப்பெற்று பயன் பெறுவர். மாணவர்கள் மேன்மையடைவார்கள். வாணிபம் செய்பவர்கள் கணிசமான முன்னேற்றமடைய காலம் கனிந்து வந்துவிட்டது.

## மகரம்

(உத்திராடம் 2, 3, 4 பாதங்கள், திருவோணம் மற்றும் அவிட்டம் 1, 2 பாதங்கள்)

உங்கள் இராசிக்குப் பன்னிரண்டில் வியாழ பகவான் சஞ்சரிக்கிறுர். இதனால் குடும்பத்தில் ஒற்றுமையின்மை, மனைவி மற்றும் நெருங்கிய உறவினர்களின் உடல்நிலையில் சிக்கல்கள் உருவாகலாம். மருத்துவச் செலவு அதிகரிக்கும். வரவேண்டிய பாக்கியை வசூலிப்பதில் மிகுந்த சிரமம் காணப்படும். வெளிநாட்டில் வசிப்பவர்களும் பல சிக்கல்களை எதிர்நோக்கவேண்டியுள்ளது. வெளிநாட்டிற்குச் செல்ல விரும்புகிறவர்கள் விசா பெறுவதில் சங்கடங்களை எதிர்கொள்ளுவார்கள். வீடு, மனை, வாகனம் போன்ற இனங்களில் தகராறுகள் உருவாகும். ஒன்பதில் உலவும் இராகுவினாலும் பல தொல்லைகள் சங்கடங்கள் உருவாகும். பிரயாணம் செய்யும் பொழுது கவனம் மிகத் தேவை. இல்லையெனில் கைப்பொருள்

இழக்கும் நிலையும், மனச்சோர்வும் உண்டாகும். நெடும்பயணம் பயனற்றதாக அமையும், எனினும் பன்னிரண்டில் உலவும் குரு பகவான் நல்ல உறக்கத்தையும், இல்லற சுகத்தையும் வழங்குவார். சனியும் கேதுவும் உங்கள் இராசிக்கு மூன்றில் சஞ்சரிக்கின்றனர். இதனால் பணவரவு பெருகும். இளைய சகோதரர்களினால் நன்மையுண்டாகும். மனத்துணிவு கொண்டு செயலாற்றும் வாய்ப்பு உண்டாகும். வட்டி வியாபாரம், வங்கி, ஏற்றுமதி இறக்குமதி ஆகிய இனங்களில் ஈடுபட்டுள்ளவர்கள் செழிப்பைக் காண்பார்கள். கம்பளி வியாபாரம், தங்க வியாபாரம் செய்வோர்கள் மேன்நிலை எய்துவார்கள். சரீர தேஜஸ் உண்டாகும். பிறரால் நன்மைகள் பல உண்டு. எதிரிகள் மறைவார்கள். மதிப்பு உயரும். சிலருக்கு காது சம்பந்தமான நோய்கள் வந்து விலகும். பொதுவாக எல்லா முயற்சிகளிலும் வெற்றி காணலாம்.

### கும்பம்

(அவிட்டம், 3, 4 பாதங்கள், சதயம், மற்றும் பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள்.)

**உ**ங்கள் இராசிக்கு இரண்டில் கேதுவும் சனியும் உலவுகிறார்கள். இது சிலாக்கியமாகாது. இந்நிலையில் ஸ்ரீராமனைப் போன்று உத்தமனாக இருந்தாலும், உறுதியான உடல் அமையப்பெற்றிருந்தாலும், துன்பப்பட்டேயாக வேண்டும் எனப்பழய நூல் ஒன்றில் காணப்படுகிறது. மற்றவர்களினால் வெறுக்கப்படலாம். ஏமாற்றப்படலாம். வறுமை, பிணி வாட்டும். குடும்பத்தில் சங்கடங்கள் உருவாகும். முகம், வாய் போன்ற இடங்களில் புண்கள் தோன்றலாம். இனிமையான வார்த்தைகளை இழந்தவனாகவும் ஆகிறான் என்று கூறப்பட்டுள்ளது. சிலருக்கு மரணத்திற்கொப்பான பயம் ஏற்படலாம். எனினும் பதினொன்றில் உலவும் குரு உங்கள் குறைகளைத் தீர்க்க உதவுகிறார். பணவசதி பெருகும். கடன்கள் பைசலாகும். நோயிலிருந்து நிவாரணம் பெறமுடியும். தெய்வ பலம் கை கூடுவதால் மனதில் உற்சாகம் குடிகொள்ளும். சிலர் வெளிநாட்டிற்குச் சென்று வாழும் பாக்கியமும் அடையப்பெறுவீர்கள். வியாபாரம் செழிக்கும், இடமாற்றத்தால் அனுகூலமேற்படும். பூமி மனை போன்ற நிலையான சொத்துக்களை வாங்கும் யோகமுண்டு. வாகன வசதியுண்டு. புதிய ஆடை ஆபரணச் சேர்க்கையுண்டு. உள்நாட்டுப் பயணம் பயனுள்ளதாக அமையும். புனிதப்பயணம் மேற்கொண்டு மனச்சாந்தி பெறுவீர்கள். நண்பர்களின் உதவி தக்கச் சமயத்தில் கிடைக்கப்பெறுவீர்கள். கடிதத் தொடர்பு ஆக்கம் தரும். மக்களால் நலம் பல விளையும். கணவன் மனைவி உறவு நன்கு பலப்படும். கூட்டு வியாபாரம் செய்பவர்கள். பங்குதாரர்களின் ஆதரவைப் பெற்று நன்மையடைவார்கள்.

### மீனம்

(பூரட்டாதி நான்காம்பாதம், உத்திரட்டாதி மற்றும் ரேவதி.)

**உ**ங்கள் இராசியில் கேதுவும், ஏழில் இராகுவும் சஞ்சரிக்கின்றனர். பிப்ரவரியிலிருந்து சனியும் உங்கள் ராசியில் உலவுகிறார். விஷம், நெருப்பு இவற்றால் துயரம் நேரலாம். உறவினர்களின் விரோதம் பெருகும். நண்பர்கள் உங்களை விட்டு பிரிந்துச் சென்றுவிடுவார்கள். இருக்கும் இடத்தையும் சிலர் இழக்கவேண்டிவரும். மக்களாலும் துன்பம் அடையப் பெறுவீர்கள். வயிறு, கண் இவற்றில் நோயுண்டாகும். மனக்கவலை மிகும். செய்யும் முயற்சிகளில் தோல்வி காணும். எதிரிகளின் தொல்லைகள் அதிகரிக்கும். சிலர் தவறான நெறியில் சென்று வருந்தநேரிடும். பெண்கள் சிலர் கர்ப்பப்பை சம்பந்தமான நோயினால் வருத்தமுறுவார்கள். உங்கள் இராசிநாதனாகிய குரு பத்தாம் வீட்டில் சஞ்சரிக்கிறார். பொதுவிதிப்படி இது சிலாக்கியமில்லை. "ஈசனாரொருபத்திலே தலையொட்டிலே யிரந்துண்டதும்' என்றொரு தமிழ்பாடல் உண்டு. அதாவது வறுமை வாட்டும். பணமுடை அதிகமாகும். தொழிலில் மாற்றம் உண்டாகும். சிலருக்கு இடமாற்றமும் உண்டு. ஆனால் சிறப்பு விதியின்படி குரு சில நன்மைகளையும் வழங்குவார். குடும்ப நிலம் ஓங்கும். உத்தியோகத்தில் மகிழ்ச்சியான மாற்றம் ஏற்படும். அதில் பதவி உயர்வு முண்டு. பணவசதி பெருகும். வாக்கு வன்மையுண்டாகும். தாய் நலம் சிறக்கும். புதிய வாகன வசதிகள் உண்டாகும். உயர் படிப்பிற்கு காத்திருப்பவர்கள் அதனைப் பெற்று இன்புறுவார்கள். கடன் தொல்லை கட்டுங்கடங்கி இருக்கும். தாய் மாமனால் நலம் விளையும். மாணவர்கள் போட்டிப்பரீட்சைகளில் வெற்றி காண்பார்கள். புதிய வீடு கட்டி அதில்குடிபுகும் யோகமும் சிலர் அடையப்பெறுவார்கள்.



### வடநாட்டுத் திருப்பதிகள்

திருமால் கோயில் கொண்டருளிய இடங்கள் நூற்றெட்டில் வடநாட்டில் இருப்பவை பன்னிரண்டு என்பர். (நூற்றெட்டுத் திருப்பதிப்போற்றி அகவல் கா.அ. ஷண்முகமுதலியார் சென்னை, 1963, பக்கம், 79-99) அவை: திருவேங்கடம், திரு அயோத்தி, திருச்சாளக்கிராமம், திருச்சிங்கவேள் குன்றம், திருக்கண்டங் கடிநகர், திருநைமிசாரணியம், திருப்பிரிதி, திருவதரியாச்சிரமம், திருவட மதுரை, திருத்துவாரகை, திருஆய்ப்பாடி, திருப்பாற்கடல் என்பன. இவ்வுகந்தருளின நிலங்களுள் திருப்பாற்கடல் மண்ணுலகின் புறம்பே உள்ளது. அது வட துருவத்தில் உள்ளது என்னும் கருத்தும் உண்டு. (நாலாயிர திவ்வியப்பிரபந்தம், (பதி) வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார், சென்னை, 1973, பக்கம் 844) அதனை விடுத்து எஞ்சிய பதினொன்றை மட்டுமே வட நாட்டுத் திருப்பதிகள் என்று குறித்தல் பொருந்தும்.

### வடவேங்கடம்

வடநாட்டுத் திருப்பதிகளுள் தமிழகத்தின் வடக்கு எல்லையில் இருப்பது திருவேங்கடம். இதனால் இது வடவேங்கடம் என்று குறிக்கப்பெறுகிறது. திருமங்கையாழ்வாரும்,

"வண்டு வாழ்வட வேங்கடமலை"
(பெ.தி. 2:1:3)

"வந்தெனது மனத்திருந்த வடமலையை"
(பெ.தி. 5:6:7)

"வடமாமலை உச்சியை"
(பெ.தி. 7:10:3)

"மல்லார்தோள்வட வேங்கடவன்"
(பெ.தி. 10:10:5)

"வடதிருவேங் கடம்மேய மைந்தா"
(தி.நெ.தா. 16)

"தெய்வ வடமலை"
(பெ.மடல், கண்ணி-6)

என்று குறித்துள்ளார்.

பெருமான் மலைகள் பலவற்றில் உறைகிறுன். அவையெல்லாம் திருமலை என்று குறிக்கப்பெறவில்லை. இம்மலை ஒன்று மட்டுமே அச்சிறப்பினைப் பெற்றுள்ளது. அப்பெயர் இம்மலைக்குக் காரண இடுகுறிப்பெயராய் அமைந்துள்ளது. இதனால்தான் திருமாலிருஞ்சோலைமலை தெற்கில் திருமலை என்று குறிக்கப்படுகிறது. மேலும் இது தமிழ்மொழி நடையாடுவதற்கு எல்லையாக இருக்கிறது. பெரியவாச்சான் பிள்ளை, "திருமாமம் சொன்னார் எல்லாருடைய ஸம்ஸார துரிதத்தைப் (பிறவித்துன்பங்களை) போக்குகைக்காகத் திருமலையிலே வந்து ஸந்நிஹிதன் (அணியன்) ஆனன். நாம் அங்கே போய் அனுபவிப்போம் என்று திருவுள்ளத்தோடே கூட்டுகிறுர். தமிழ்பாழை நடையாடுகிறதுக்கு எல்லையான நிலமுமாய் இருக்குமிறே" (பெரிய திருமொழி உரையும் தமிழாக்கமும் (முதல் இருநூறு பாசுரங்கள்) தமிழாக்கம் டாக்டர் தெ. ஞானசுந்தரம், தமிழ்ப்பல்கலைக் கழகம் தஞ்சாவூர், பக்கம் 262.) என்று திருமலையின் ஏற்றத்தைக் கொண்டாடுகிறுர்.

உகந்தருளின நிலங்கள் அனைத்துள்ளும் ஆழ்வார்களால் மிகுதியும் சிறப்பிக்கப் பெற்ற இரண்டாவது நிலம் இது. முதலாவது திருவரங்கம். திருவரங்கத்தை ஆழ்வார்கள் பதினொருவர் பாடியுள்ளனர். இதனைப் பதின்மர் பாடியுள்ளனர். திருவரங்கம் 247 பாசுரங்களையும் திருவேங்கடம் 202 பாசுரங்களையும் பெற்றுள்ளன.

### திருமங்கையாழ்வாரும் திருவேங்கடமும்

திருமங்கையாழ்வார் மண்ணுலகில் இறைவன் குடி கொண்டுள்ள திருப்பதிகளில் மண்டியவர். எண்பத்தாறு திருக்கோயில்களைத் தம் பாசுரங்களால் போற்றியவர். பன்னிரு திருப்பதிகளைக் குறித்து ஒன்றினுக்கு மேற்பட்ட திருமொழிகள் தந்துள்ளார். அவை வருமாறு:

இதனால் திருநறையூர், திருக்கண்ணபுரம், திருவரங்கம் ஆகிய மூன்றனை அடுத்துத் திருமங்கையாழ்வார் மிகவும் கால்தாழ்ந்த உகந்தருளின நிலம் திருவேங்கடம் என்பது தெளிவு.

திருமங்கையாழ்வார் திருவேங்கடத்தைப் பற்றி 'கொங்கலர்ந்த', 'தாயே தந்தை', 'கண்ணூர் கடல்சூழ்', 'வானவர் தங்கள்' என்னும் நான்கு திருமொழிகளில் மட்டுமின்றி வேறு இருபத்திரண்டு பாசுரங்களிலும் (நாலாயிர திவ்வியப் பிரபந்தம், (பதி) வித்வான் கி. வேங்கடசாமி ரெட்டியார், சென்னை1973

# திருவேங்கடவனும் திருமங்கையாழ்வாரும்

டாக்டர். தெ. ஞானசுந்தரம் - சென்னை.

| இடம் | முதல் | மொத்தத் திருமொழிகள் |
|---|---|---|
| 1. திருநறையூர் | 6:4 - 7:3 | 10 |
| 2. திருக்கண்ணபுரம் | 8:1 - 8:10 | 10 |
| 3. திருவரங்கம் | 5:4 - 5:8 | 5 |
| 4. திருவேங்கடம் | 1:8 - 2:1 | 4 |
| 5. திருவழுந்தூர் | 7:5 - 7:8 | 4 |
| 6. திருவாலி | 3:5 - 3:7 | 3 |
| 7. திருவிண்ணகர் | 6:1 - 6:3 | 3 |
| 8. திருக்கடல்மல்லை | 2:5 - 2:6 | 2 |
| 9. திருச்சித்திரகூடம் | 3:2 - 3:3 | 2 |
| 10. திருப்புல்லாணி | 9:3 - 9:4 | 2 |
| 11. திருக்குறுங்குடி | 9:5 - 9:6 | 2 |
| 12. திருமாலிருஞ்சோலை | 9:8 - 9:9 | 2 |

பக்கம் 848) குறித்துள்ளார். இவற்றுள் பதினோர் இடங்கள் வேறு திருப்பதிகளில் உள்ள பெருமானைப் பாடும் போதும், எஞ்சிய பதினோர் இடங்கள் பொது நிலையில் பாடும் போதும் குறிக்கப்படுவன ஆகும்.

## திருவேங்கடவனை நினைவுகூறும் திருப்பதிகள்

திருநாங்கூர்ச் செம்பொன் செய்கோயில், திருநாங்கூர்த் திருவெள்ளக்குளம், திருவெள்ளறை, திருவரங்கம், திருநறையூர், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருவல்லவாழ், திருமாலிருஞ்சோலை ஆகியவற்றைப் பாடுமிடங்களில் திருவேங்கடமுடையானை நினைவுகூர்ந்துள்ளார். திருவரங்கம், திருநறையூர் பற்றிய திருமொழிகளில் இருமுறை குறிப்பிடுகிறார். இவற்றுள் திருவரங்கம் தவிர்ந்த ஏனைய இடங்களில் பெருமான் கிழக்குநோக்கி நின்ற கோலத்தில் காட்சித் தருகிறான். திருவேங்கடத்திலும் பெருமான் கிழக்கு நோக்கி நின்ற கோலத்திலேயே திகழ்கிறான். இதனால், திருமங்கையாழ்வார் பிற இடங்களில் பெருமானது நின்ற கோலத்தைக் காணும்போது திருவேங்கடவனை நினைந்து மகிழ்கிறார் என்பது விளங்கும். திருவரங்கமுடையானைப் பாடும்போது திருவேங்கடமுடையானை நினைக்கக்காரணம் முன்னவனைப்போலப் பின்னவனும் பெருஞ்சிறப்போடு திகழ்பவன் என்பதாகும்.

## திருவேங்கடத்திருமொழியில் இடம் பெறும் ஏனைய இறைவர்கள்

திருமங்கையாழ்வாருக்குப் பிற திருப்பதிகளில் உள்ள பெருமானது நின்ற கோலத்தைக் காணும் போது வேங்கடமுடையான் திருக்கோலம் நினைவுக்கு வருவது போலத் திருவேங்கடவனது நின்ற கோலத்தைக் காணும் போது பிற இடங்களில் உள்ள பெருமானது நின்ற கோலம் நினைவுக்கு வருகிறது. 'கொங்கலர்ந்த' திருமொழி திருவேங்கடத்தைக் குறித்துப் பாடப்பட்டது. அதில் திருப்பாற்கடல், திருவரங்கம், திருஇடவெந்தை, திருஅட்டபுயகரம், திருப்பிரிதி ஆகிய திருப்பதிகள் இடம்பெற்றுள்ளன.

"பள்ளி யாவது பாற்க டலரங் கம்"
(பெ.தி. 1:8:2)

"ஏத்து வார்தம்ம னத்துள் ளான்இட
வெந்தை மேவிய எம்பிரான்"
(பெ.தி. 1:8:4)

"எண்கை யான்இம யத்துள்
ளான்இருஞ்
சோலை மேவிய எம்பிரான்"
(பெ.தி. 1:8:5)

இவற்றுள் திருவேங்கடத்துறையும் பெருமான் பள்ளிகொள்ளும் இடங்கள் என்ற வகையில் திருப்பாற்கடலும் திருவரங்கமும் குறிக்கப்பட்டுள்ளன. திருஇடவெந்தை, அட்டபுயகரம் ஆகிய இடங்களில் பெருமான் நின்ற கோலத்தில் உறைகிறான். எனவே அத்திருப்பதிகள் நினைவுக்கு வருகின்றன. திருப்பிரிதியில் பெருமான் இருந்த கோலத்தில் உறைந்தாலும், மலையில் இருக்கும் ஒப்புமையால் அவனை நினைவுகூர்கிறார் எனலாம்.

## திருமங்கையாழ்வார் காலத் திருவேங்கடம்

திருமங்கையாழ்வார் தம் பாசுரங்களில் அன்று திருவேங்கடம் இருந்த நிலையினைச் சொல்லோவியமாக்த் தீட்டியுள்ளார். இன்று திருவேங்கடம் பல மாற்றங்களைப் பெற்றுள்ளது. ஒரு நகரத்திற்குரிய வசதியோடு விளங்குகிறது. செயற்கையின் ஆரவார ஆதிக்கத்தில் இயற்கையின் அமைதி அழகு ஒடுங்கி நிற்கிறது. ஆனால் திருமங்கையாழ்வார் காலத்தில் செழிப்பான குறிஞ்சி நிலமாக இயற்கை திருவோலக்கம் இருக்கும் இடமாக இருந்துள்ளது.

## திருவேங்கட மலை

திருவேங்கடம் உலகுக்கெல்லாம் திலகமாய்த் திகழ்ந்தது. திருநாட்டைக் காட்

டிலும் செல்வம் மிக்கதாய் இருந்தது. அது வானளாவி நின்றது. அதன் கொடுமுடிகள் விண்ணைத் தொட்டன. அது திண்ணிய வரைகளாலே சூழப் பட்டிருந்தது. அதன்மேலே திங் களும் ஞாயிறும் நேர்கொடு நேர் செல்லமுடியாமல் விலகிச் சென்றன. இதனை,

"உலகுக்கெல்லாம், தேசமாய்த்திக
ழும்ம லைத்திரு வேங்கடம்"
(பெ.தி. 1:8:9)

"சீரார் திருவேங் கடமா மலை"
(பெ.தி. 1:10:3)

"சேணுர் திருவேங் கடமா மலை"
(பெ.தி. 1:10:5)

"விண்டோய் சிகரத் திருவேங்கடம்"
(பெ.தி. 1:10:4)

"விண்ணுர் நீள்சிகர விரையார்திரு
வேங்கடவா" (பெ.தி. 1:9:6)

"செப்பார் திண்வரைசூழ் திருவேங்கட
மாமலை" (பெ.தி. 1:9:5)

"விலங்கல் குடுமித் திருவேங் கடம்"
(பெ.தி. 1:10:2)

என்னும் குறிப்புகளால் அறிய லாம்.

அம்மலையில் நீருண்ட மேகங் கள் குன்றுகளைப்போலக் காட்சி தந்தன. அவற்றி டையே மின்னல் வெட்டித் தெறித்தது. இடிமுழக்கம் எழுந் தது. எங்கும் குளிர்ச்சி பர வியது. அந்த மலை குளிர் மலையாய் மாறிற்று.

"நிலந்தோய் நீள்முகில்சேர்
நெறியார்திரு வேங்கடவா"
(பெ.தி. 1:9:4)

"கொண்டல் உந்து உயர்
வேங்கடமலை" (பெ.தி. 2:1:4)

"மின்னு மாமுகில் மேவு தண்திரு
வேங்கடமலை" (பெ.தி. 2:1:10)

மின்னார் முகில்சூழ் திருவேங்
கடம்" (பெ.தி. 2:1:10)

"மின்திகழ் குடுமி வேங்கடமலை"
(பெ.தி. 4:3:8)

"மின்னி மழைதவழும் வேங்கடத்து"
(பெ.மடல்.கண்ணி 62)

"குன்றேய் மேகமதிர் குளிர் மாமலை"
(பெ.தி. 1:9:3)

என்னும் அடிகள் அம்மலையின் குளிர்ச்சி நிறைந்த சூழலைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

## பொழில்

திருமலை வறண்ட மலைப் பகுதியாக இல்லை. அது பெருஞ்சோலையாகத் திகழ்ந் தது. அங்கே மரம், செடி, கொடிகள் தழைத்து வளர்ந் தன. குறிஞ்சிக்குள்ளே முல்லை யின் அழகு முகம் தெரிந்தது. மூங்கில் மரங்கள் வெடித்து முத் துக்களை உதிர்த்தன. பூக்கள் மலர்ந்து மலையையே மணக் கச் செய்தன. அங்குப் பெரி தும் வளர்ந்த மரம் மூங்கிலே என்பது திருமங்கையாழ்வார் பாசுரத்தால் விளங்குகிறது.

"வேயேய் பூம்பொழில் சூழ்
விரையார்
திருவேங்கடவா" (பெ.தி. 1:9:1)

"காம்பினார்திரு வேங்கடப் பொருப்பு"
(பெ.தி. 5:3:4)

"வெண் தரளங்கள்
வேய்விண் டுதிர்வேங் கடமா
மலை"
(பெ.தி. 1:10:8)

"வேய்கள் நின்றுவெண் முத்த
மேசொரி வேங்க டமலை"
(பெ.தி. 2:1:8)

"வாச மாமலர் நாறு வார்பொழில்
சூழ்தரும் திருவேங்கடம்"
(பெ.தி.1:8:9)

என்பவை திருமங்கையாழ்வார் பாசுரம்.

சோலை எங்கும் வண்டுகள் ஆளத்தி வைத்தன. அவை மருள் இந்தளம் என்னும் பண் இசைத்தன. அங்கங்கே அவை கட்டிய தேன் கூடுகள் தொங் கின. அவற்றிலிருந்து தேன் ஒழுகியது. அத்தேன் வெள்ளம் சுனை வெள்ளத்தோடு கலந்து சுவை கூட்டியது. நீர்நிலை யின் பரப்படையக் கமலங்கள் பூத்தன. அவற்றில் கயல்மீன் கள் துள்ளிக்குதித்துக் கும் மாளம் அடித்தன. அருவிகள் பல அங்கங்கே வீழ்ந்தோடின. அவ்வழகிய மலைப்பகுதிகளில் மான்கள் கூட்டமாக வந்து தங் கின. யானைகள் திரிந்தன.

"தேனேய் பூம்பொழில் சூழ்
திருவேங்கட மாமலை" (பெ.தி. 1:9:2)

"வண்டு வாழ்வட வேங்கடமலை"
(பெ.தி. 2:1:3)

"மருட்கள் வண்டுகள் பாடும்
வேங்கடம்" (பெ.தி. 2:1:7)

என்று வண்டுகளின் பாட்டிசை யும்,

"கொற்றேன் பாய்ந்தொழுகும் குளிர்
சோலை ஆழ் வேங்கடவா"
(பெ.தி. 1:9:8)

"கற்றேன் பாய்ந்தொழுகும்
கமலச்சுனை வேங்கடவா"
(பெ.தி. 1:9:9)

"தேன் கொண்ட சாரல் திருவேங்
கடத்தான்" (பெ.தி. 6:8:1)

என்று தேனின் பெருக்கும்,

"தீர்த்த நீர்த்தடஞ் சோலை"
(பெ.தி. 1:8:4)

"செங்க யல்திளைக் குஞ்சுனை"
(பெ.தி. 1:8:1)

"அருவிசோர் வேங்கடம்"
(பெ.தி. 8:2:3)

என்று நீர் வளமும்,

"கவரி மாக்கணம் சேரும் வேங்கடம்"
(பெ.தி. 2:1:6)

"கரிசேர் பூம்பொழில்சூழ் கனமாமலை"
(பெ.தி. 1:9:7)

என்று விலங்குகளின் கூட்டமும் குறிக்கப்படுகின்றன.

## வேடுவர்கள்

அங்கு வேடுவர்கள் வாழ்கின் றனர். அவர்கள் குறவர், வில் லார் என்றும் குறிக்கப்பட்டனர். அவர்கள் வில்லும் கையுமாகத்

திரிந்தார்கள். அவர்கள் திருவேங்கடமுடையானை விழிப்போடு காத்த 'குகப்பெருமாள்கள்' ஆவர். அவர்கள் அகில் மரங்களை வெட்டி நெருப்பில் இட்டனர். அந்த மணம் கமழும் புகை மலையை சூழ்ந்து கொண்டது.

தினைப்புனங்களில் பரண் மேல் இருந்து குறத்தியர் ஆலோலம்பாடிக் காவல் புரிந்தனர். வண்டுகள் அவர்களுக்குப் பின்பாட்டுப் பாடின. அக்குறப்பெண்கள் வஞ்சிக்கொடி போன்ற இடையும் நெஞ்சைக் கவரும் பெண்மைக் குணங்களும் கொண்டிருந்தனர்.

"வேடார் திருவேங் கடம்"
(பெ.தி. 4:7:5)

"வில்லார் மலிவேங் கடமா மலை"
(பெ.தி. 1:10:10)

"கானவரிடு காரகிற்புகை யோங்கு
வேங்கடம்" (பெ.தி. 2:1:1)

"குறவர் மாதர் களோடு வண்டு
குறிஞ்சி மருளிசை பாடும் வேங்கடம்"
(பெ.தி. 2:1:2)

"கொம்பின் அன்னஇ டைம டக்குற
மாதர் நீள்இத ணந்தோறும்
செம்பு னம்மவை காவல் கொள்திரு
வேங்க டம்" (பெ.தி. 1:8:8)

என்பவை அவர்கள் வாழ்க்கையைத் தெரிவிக்கின்றன.

### அடியார்கள்

இத்தகைய இயற்கைச் சூழலில் மலையின் நடுவே சோலைக்குள்ளே உறையும் பிரானை வணங்க இறையன்பர்கள் மெய்வருத்தம் பாராது நடந்து சென்றனர். அங்குப் பாதைகள் பல இருந்தன. "நெறியார்திரு வேங்கடவா" (பெ.தி. 1:9:4) என்பது இதனைத் தெரிவிக்கிறது. திருவேங்கடத்திற்கு மண்ணோர் மட்டுமன்றி விண்ணோரும் வந்து வழிபட்டனர். அவுணர்களும் வந்து வழிபட்டார்களாம். நான்முகனும் உருத்திரனும் இந்திரனும் அங்குள்ள பெருமானை ஏத்தினர். திருமலை விண்ணுலகத்திற்கும் மண்ணுலகத்திற்கும் இடையே அமைந்து இருவர்க்கும் வணங்குதற்குப் பாங்காய் அமைந்தது. இரட்டைக் குழந்தைகளைப் பெற்ற தாய், குழந்தைகளைத் தன் இருமருங்கும் பாலூட்டுவதற்கேற்றவாறு கிடத்தித் தான் நடுவே கிடப்பது போன்று இருந்தது.

"நாடொறும், தெள்ளி யார் வணங்
கும்ம லைத்திரு வேங்கடம்"
(பெ.தி. 1:8:2)

"விண்ணோர் தொழும்வேங்
கடமா மலை" (பெ.தி. 1:10:1)

"எங்கும் வானவர் தான வர்நிறைந்
தேத்தும் வேங்கடம்" (பெ.தி. 2:1:5)

"ஆடு தாமரை யோனும் ஈசனும்
அமரர் கோனும்நின் றேத்தும்
வேங்கடத்து ஆடு கூத்தன்"
(பெ.தி. 2:1:9)

என்பவற்றால் அங்கு யார் யார் வழிபட்டனர் என்பது புலனாகிறது.

### திருமங்கையாழ்வாரின் இறை நுகர்ச்சி

திருமலையைக் குறித்த நான்கு திருமொழிகளில் திருமங்கையாழ்வார் திருவேங்கடமுடையானிடம் பெற்றுக்களித்த இறையனுபவம் முழுமையடைந்ததாய் உள்ளது. 'கொங்கலர்ந்த' திருமொழியில் 'திருமலையை அடைவோம்' என்று திருவுள்ளத்தோடு கூட்டுகிறார். 'தாயே தந்தை' திருமொழியில் தம் வெறுமையையும் தண்மையையும் சொல்லித் தம்மைக் கைக்கொள்ள வேண்டும் என்று கால்பிடிக்கிறார். 'கண்ணார்' திருமொழியில் பெருமான்தன் நிலைகாட்டித் தமது திருவுள்ளத்தில் புக்கு இறையன்பு தொடக்கமானவற்றைப் பிறப்பித்தவன் என்கிறார். 'வானவர் தங்கள்' திருமொழியில் தாம் பெற்ற இறையின்ப நுகர்ச்சிக்குப் பாங்காய் அமைந்த திருவுள்ளத்தைக் கொண்டாடுகிறார். இவ்வாறு ஆழ்வாருடைய திருவேங்கட இறையனுபவம் தலைக்கட்டுகிறது.

முதல் திருமொழி நெஞ்சை நோக்கிப் பேசுவதாகும். நெஞ்சைத் திருவேங்கடமுடையானிடம் செல்லத் தூண்டுவது அது. அதற்கேற்பத் திருவேங்கடவன் ஏற்றம் பாரித்துப் பேசப்பட்டுள்ளது. நெஞ்சை நோக்கிப் பாற்கடலில் பள்ளி கொண்டவனும் கண்ணனாகவும் குறளனாகவும் ஆளரியாகவும் பிறந்தவனுமாகிய பரம்பொருளே திருவேங்கடத்துள் எழுந்தருளியுள்ளான் என்கிறார். கண்ணன் நிகழ்த்திய திருவிளையாடல்கள் பலவற்றைக் குறிக்கி

## சந்தாதாரர்களுக்கு ஒரு விண்ணப்பம்

**1-12-95 அன்று திருமலையில் கூடிய தி.தி. தேவஸ்தானப் பொறுப்பாண்மைக்குழு கூட்டத்தில் 'ஸப்தகிரி'யின் வருடாந்திர சந்தாதொகை ரூ. 24/-லிருந்து ரூ. 48/- ஆக உயர்த்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. இப்புதிய சந்தாவிகிதம் 1-4-95 முதற்கொண்டு செயலாக்கப்படும். ஆகவே வாசகர்கள் இப்புதிய சந்தா உயர்வை மனதிற்கொண்டு தங்கள் சந்தாவைப் புதிப்பித்துக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். சந்தாதாரர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்கிடுமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.**

ரூர். அவன், தன் திருப்பெய ரைக் கூறுபவர்களின் பிறவித் துன்பத்தைப் போக்கிக் கரை மரம் சேர்ப்பவன் என்று அவனி டம் செல்ல உள்ளத்திற்கு வடிம் பிட்டுக் கூறுகிறுர்.

"பேசும் இன்திரு நாமம் எட்டெழுத்
துஞ்சொல் லிநின்று பின்னரும்
பேசு வார்தமை உய்ய வாங்கிப்பி
றப்ப றுக்கும்பி ரான்"

(பெ.தி. 1:8:9)

என்கிறுர்.

அடுத்த திருமொழியில் ஆழ் வார் திருவேங்கடவனிடம் சரண் புகுகிறுர். அதில் வேங்க டநாதனைத் தவிர வேறு இடங் களில் உள்ள பெருமானைப் பற் றிய பேச்சே இல்லை. அவ னிடம் தஞ்சம் புகும் நிலை யில் மற்றத் திருப்பதிகளில் உள்ள பெருமான்பால் அவர் நினைவு பிரிகதிர்ப்படவில்லை. அதில் இறைவன் திருத்தோற் றங்களைப் (அவதாரங்களைப்) பற்றிய குறிப்பும் இல்லை. பெரு மானை விளித்துத் தம் குற்றங் ளைத் தெரிவித்து ஆட்கொள்ள வேண்டும் என்று விண்ணப்பித் தலே தலைதூக்கி நிற்கிறது. யான் உறவல்லாத தாய் தந்தை தாரம் சுற்றம் மக்கள் ஆகி யோரை உறவாகக் கொண்டு துன்புற்றேன். பெண்களின் கண்வலையில் அகப்பட்டுப் பல வகை நரகத்தில் புகும்படி யான தீவினைகள் புரிந் தேன். பல உயிர்களைக் கொன் றேன். இரந்து வந்தவர்களுக்கு இனிய சொல் ஒன்றைச் சொல் லியறியேன். பிறந்தும் இறந் தும் இளைத்தேன். என்னிடம் நன்மை ஒன்றும் இல்லை. நின் திருவடிகளைப் பரவும் ஆற்ற லும் எனக்கு இல்லை. சிறு வனாய் இருந்தபோது தெரி யாமல் தீமைகள் செய்தேன். பெரியவனாய் வளர்ந்தபோது பிறர்க்கே உழைத்து நிலை கெட்டேன். துயரங்களைத் தாங்கமாட்டேன். உன் திரு வடியை நாடி வந்தேன்" என்கிறுர்.

பற்றேல் ஒன்றுமிலேன் பாவ
மேசெய்து பாவியானேன்
மற்றேல் ஒன்றறியேன் - மாய
னே!எங்கள் மாதவனே!
கற்றேன் பாய்ந்தொழுகும் - கம
லச்சுனை வேங்கடவா!
அற்றேன் வந்தடைந்தேன்-அடி
யேனைஆட் கொண்டருளே.

(பெ.தி. 1:9:9)

என்று சந்து செய்து வைப்ப வளான (புருஷகார பூதையான) பெரிய பிராட்டியாரை முன் னிட்டுக் கொண்டு பெருமானி டம் தஞ்சம் புகுகிறுர்.

மூன்றும் திருமொழியில் ஆழ் வார் அருள்வேண்ட, அவன் அருள்புரிய அதனால் மகிழ்ந்து அவனைவிடமாட்டேன் என்கி ரூர். இதற்கேற்றவாறு அவன் அருளை வேண்டுங் கால், அவன் இராவணனை அழித்து விண்ணேர்களையும், உலகை உண்டு பெருவெள்ளங் கோத்தகாலை உயிர்களையும், குறளனாய் நடந்து மாவலியை அழித்து இந்திரனையும் காத்த ருளிய சிறப்பினைப் பேசுகிறுர். இறைவன் நெஞ்சில் புகுந்தவு டன் ஆழ்வார்க்குத் தேனாய் இனித்தான். இதனை,

"தேனே! திருவேங் கடமா மலைமேய
கோனே! என்மனம் குடிகொண் டிருந்-
தாயே"

(பெ.தி. 1:10:7)

என்கிறுர்.

இறுதித் திருமொழியில் தமக்கு இணக்கமாக நடந்த நெஞ்சினைப் பாராட்டுகிறுர். ஆதலின் இத்திருமொழியில் நெஞ்சமே சிறப்பிக்கப்படுகிறது.

புத்த சமண நெறிகளில் செல்லாமல் திருவேங்கடவனி டம் அடிமைப்பட்டதற்காக அத னைப் போற்றுகிறுர். இதில் பெருமானுடைய ஏற்றம் பற்றிய சிறுசிறு குறிப்புகளே உள்ளன. 'மாண் குறளான அந்தணன்', 'அறவநாயகன்', 'அங்கண் நாய கன்', 'அமர நாயகன்' போன்ற வையே அக்குறிப்புக்கள்.

## தடையும் விடையும்

'தாயே தந்தை' திருமொழியில் திருமங்கையாழ்வார் பெருமான் திருவடிகளில் தஞ்சம் புகுகி ரூர். இதற்கு முன்பே 'வாணிலா முறுவல்' திருமொழியில் நைமி சாரணியத்துள் உறையும் பெரு மானிடம் தஞ்சம் அடைந்துள் ளார். இவ்வாறு ஒருமுறை தஞ்சம் புகுந்ததோடு அமை யாமல் மீண்டும் தஞ்சம் புகு வது பொருந்துமா என்னும் ஐயம் எழும். ஏனெனில் சரணு கதி அடைவது என்பது ஒரு முறையே நிகழ்வது. மீட் டும் மீட்டும் செய்வதன்று. இவ் ஐயத்தை உட்கொண்டு உரைவேந்தர் பெரியவாச்சான் பிள்ளை 'தாயே தந்தை' திரு மொழிப் பாயிரத்தில் விளக் கம் தந்துள்ளார். மென்மை யானவர் தாகம் மிகுந்தபோ ழுது பல முறையும் முகத்தில் நீரை அள்ளித்தெளித்துக் கொள் வர். அதுபோல, மென்மையான ஆழ்வார் மீண்டும் தஞ்சம் புகு கிறுர் என்கிறுர். "இதுதான் 'வாணிலா முறுவலி'லே செய் தது அன்றோ எனில், ஸுகுமார ராய் இருக்குமவர்கள் விடாய்த் தால் பலகாலும் முகத்திலே நீரை அள்ளி ஏறட்டுக்கொள் ளுமாப்போலே பலகாலும் ப்ர பத்தி பண்ணும்படி ஆயிற்று இவருடைய மார்த்தவம் இருப் பது. ஒருக்கால் பெற்றிலோம்

என்று கைவாங்கும் அளவு அன்றிக்கே பேற்றளவும் ப்ர பத்தி பண்ணுவர் ஆயிற்று" என்பது அவரது விளக்கம்.

## முடிவுகள்

திருவேங்கடவனைக் குறித்த திருமங்கையாழ்வார் பாசுரங் களை ஆழ்ந்து நோக்கினால் சில முடிவுகள் கிடைக்கின்றன. அவை வருமாறு:

1. திருமங்கையாழ்வார் மிகு தியும் ஈடுபட்ட சில உகந்தரு ளின நிலங்களுள் திருவேங்க டம் ஒன்று.

2. திருமங்கையாழ்வார் பிற இடங்களில் உள்ள இறைவர் சிலரைக் கண்டபோது திரு வேங்கடவனையும், திருவேங்கட வனை வணங்கும்போது வேறி டங்களில் உள்ள இறைவர் சிலரையும் நினைவு கூர்ந் துள்ளார். பெரும்பாலும் ஓர் இடத்தில் உள்ள நின்ற கோலம் மற்றோர் இடத்தில் உள்ள நின்ற கோலத்தை ஆழ் வாருக்கு நினைப்பித்துள்ளது.

3. அக்காலத்தில் திருவேங்க டம் செழிப்போடு விளங்கியுள் ளது. அங்கு மூங்கில் மரங் களே பெரிதும் வளர்ந்திருந்தன. அங்கு வேடுவரே வாழ்ந்தனர்.

4. திருவேங்கடம் விண்ண வர்க்கும் மண்ணவர்க்கும் உகப் பான நிலம் - அங்கு நடை பாதைகள் இருந்தன.

5. திருமங்கையாழ்வார் திருவேங்கடவனிடம் பெற்ற இறைநுகர்ச்சி முழுமையானது. அவர் விருப்பம் தலைக்கட்டி யது.

6. திருநைமிசாரணியத்து இறைவனிடம் தஞ்சம் புகுந்த திருமங்கையாழ்வார் தம் மென் மையால் மீண்டும் திருவேங்கட வனிடம் தஞ்சம் புகுந்துள்ளார்.



## அஷ்ட வசுக்கள்

தக்ஷப் பிராஜாதிபதியானவர் அசிக்கினி என்னும் பெண்ணை மணந்து 60 பெண்களைப் பெற்றார். அவர்க ளுள் ஒருத்தி வசு. வசு தருமனுக்கு மனைவியாகி எட்டு பிள்ளைகளைப் பெற்றாள். இவர்கள் அஷ்ட வசுக்கள் எனப் படுகின்றனர். இவர்கள் துரோணர், அர்க்கன், பிராணன், துருவன், அக்னி, தோஷன், வாஸ்து, விபாவசு (பிரபாசின்) ஆவர்.

ஒரு ரிஷியின் சாபத்தால் இந்த அஷ்ட வசுக்களும் சந் தனுவை மணந்த கங்காதேவிக்கு மக்களாகப்பிறந்தனர். முதல் எழுவரும் பிறந்தவுடனேயே இறந்து தேவலோகம் மீண்டனர். ஆனால் பிரபாசின் என்ற எட்டாம் வசு "தேவ விரதன்" என்ற பெயரில் பிரம்மச்சாரியாக நீண்ட ஆயுளு டன் புருவம்சத்தைக் காத்து பின்பு குருக்ஷேத்திரப்போரில் 'சிகண்டி'யால் வெல்லப்பட்டு உத்தராயணம் வரும்வரை அம்புப்படுக்கையில் இருந்து தருமருக்கு "விஷ்ணு ஸகஸ் ரநாமம்" உபதேசித்துப் பின்பு மோக்ஷம் பெற்றார். இவரே பிதாமகர் பீஷ்மர் ஆவார்.

தொகுத்தவர்: **ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.**



## பன்னிரு சூரிகள்

பகவானின் ஐந்து ஆயுதங்களான சங்கு, சக்கரம், கதை, வாள், வில் இவை முறையே பொய்கையாழ்வார், திரு மழிசை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமங் கைஆழ்வார் ஆகப்பிறந்தனர். சேனைமுதலிகள் (விஷ்வ க்ஷேனர்), கருடர், ஸ்ரீவைநதேயர் முறையே நம்மாழ்வார், பெரியாழ்வார், மதுரகவி ஆழ்வார் ஆகப்பிறந்தனர். பெரி யாழ்வார்தான் பின்பு மதுரகவி ஆழ்வாராகப் பிறந்தி ருக்கிறார். ஸ்ரீவத்ஸம், கௌஸ்துபம் இவை முறையே திருப்பாணாழ்வார், குலசேகர ஆழ்வார் ஆகப் பிறந்தனர். வைஜயந்தி என்ற வனமாலையே தொண்டரடிப்பொடி ஆழ்வாராகப் பிறந்தது.

இந்த 'லீலாவிபூதி' எனப்படும் பூலோகத்தில் உள்ள மக்களை பகவானை நினைந்து மோக்ஷம் பெற அனுக்ர கிக்கும் பொருட்டு "பூமிப்பிராட்டியார்" அவரை வேண்டித் தான் "ஆண்டாள்" என்னும் பெயரிலும், மேற்கூறியபடி மற்றவர்களையும் தமிழ்நாட்டில் வந்து பிறக்கும்படி கூறிப் பிறந்து "4000" திவ்யப் பிரந்தங்களை அருளினர்.

தொகுத்தவர்: **ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.**

ஆயிரம் நாவுடைய ஆதி சேஷனின் மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மீது, நிலமகளும், திருமகளும் உடன் இருக்க அனந்தசயனம் செய்யும் ஆயிரம் நாமம் உடைய மஹாவிஷ்ணுவை மட்டும் ஆழ்வார்கள் பாடவில்லை. அவர்களின் பாடல்களிலே கங்கைச் சடையுடையவனையும், பிரம்மாவையும், முப்பத்து முக்கோடி தேவர்களையும், ஆறுகளையும், திசைகளையும், மலைகளையும் பாடியிருக்கிறார்கள்.

உலகத்திலுள்ள ஜீவராசிகள் அனைத்தையுமே தங்களுடைய நாலாயிரத்தில் கொணர்ந்து இருக்கிறார்கள்.

றப்புள், தெய்வப்புள், காய்சினப் புள், ஓடுபுள் என்று பற்பல பெயர்களில் போற்றுகின்றனர்.

எம்பெருமானுக்கும், கருடனுக்கும் ஒன்றும் பேதமில்லை. இருவரும் ஒருவரே என்ற நம்பிக்கையும் உண்டு. ஒருவர் வாகனமாக அமைந்து அவரின் உதவியினால் மற்றொருவர் அசுரர்களை ஜெயிப்பதும் கருடாழ்வாருடைய தோளிலே இறைவனை தியானிப்பதும் ஒரு பண்பாடு.

கருடனுடைய கண் காயத்ரம்; சிரம் த்ரிவ்ருத்; பெயர் யஜுஸ்; அங்கங்கள் சந்தஸ்ஸுகள்; கால் நகங்கள் தீஷ்ண்யங்கள்; உடல் வாமதேவ்யம்; ஆத்மா ஸ்தோமம்; சிறகு ப்ரு

என்றும் புராணம் கூறுகிறது.

கருடனுடைய உடல் எங்கும் ஸர்ப்பங்கள் ஆபரணமாகத் திகழ்கின்றன. ஆதிசேஷனும் குளிகனும் இடது வலது கங்கணமாகவும், வாசுகி பூணூலாகவும், தக்ஷகன் அரைஞாணகவும், கார்க்கோடகன் ஆரமாகவும், இடது வலது காதுகளில் பத்ம மஹாபத்மர்கள் குண்டலங்களாகவும், சங்கபாலன் கிரீடமாகவும் கொண்ட கருடன் நம்மை பயத்திலிருந்து ரட்சிக்கின்றான்.

முதலையிடமிருந்து கஜேந்திரனைக் காக்க எம்பெருமான் நினைத்தவுடனே தோன்றி வாகனமாக அமைந்த கருடனுடைய வேகத்திற்கு நிகரில்லை.

# நாலாயிரத்தில் நற்பறவைகள்

திரு. கோம்பூர் ஆர்.டி. சாரி - சென்னை.

பறவைகள் பலவிதம்; ஒவ்வொன்றும் ஒருவிதம். அந்தப் பறவைகள் சிறப்பாக ஆழ்வார்களின் பாடல்களிலே போற்றப்படுகின்றன. அப்படிப் போற்றப்படுகின்ற பறவை இனங்களையும், போற்றிப் பாடுகின்ற ஆழ்வார்களையும், அவர்களுடைய பாடல்களையும் சற்று நோக்கி இன்பம் பெறுவது நாம் இந்தப் பறவை இனங்களுக்கு அன்பைக்காட்ட ஒரு வாய்ப்பாகும்.

## (1) கருடன்

பறவைகளில் உயர்ந்ததும், சிறந்ததுமான கருடனைப் பெரிய திருவடி, கருடாழ்வார், வைநதேயர் என்று போற்றுவது வைணவப் பெரியோர்களின் பண்பு. ஆழ்வார்களோ கருடாழ்வாரை கொற

ஹத்; வேதம் வால். இப்படி இந்தப் பறவை ஒரு தெய்வப் பறவையாகவே போற்றுவது பண்பாடு.

ஆதிசேஷனுடலோடு சேர்ந்த வேதமயமான தன் மேனியில் முகம், கை, துடை, பாதங்கள் முதலிய அங்கங்களால் பலவித வர்ணங்களை வெளியிடுவதால் ப்ரஹ்ம ஸாம்யத்தை உடையவன் கருடன். நமக்கு ஆபத்தில் நிதி போலத் துயர் துடைப்பவன். எம்பெருமானுடைய மார்பில் அணிந்த கௌஸ்துப மணியில் கருடன் நிழல் தெரியும்.

இந்திரனுடைய கோட்டையில் இருந்து அமிர்தத்தை அபகரித்தவன்தான் கருடன் என்றும், தேவர்களுடன் இந்திரன் வந்து எதிர்த்தபோது தமது புஜபலத்தால் வெற்றி பெற்றான்

சக்கரவர்த்தி திருமகன் நாக பாச மோக்ஷத்திற்குக் கருடன் எம்பெருமானை
சேவித்து வைதேகிப்பிராட்டியினுடைய கர்ணபுஷ்ப பரிமளம் கொண்ட அவள் தோள்களால் ஆரத்தழுவப் பெற்றான்.

இப்படிப்பட்ட வருணனையை சுவாமி வேதாந்ததேசிகர் தன்னுடைய கருட பஞ்சாசத், (கருடன் ஐம்பது) என்னும் ஸ்தோத்திரத்திலும், 'கருடதண்டகம்' என்னும் சமஸ்கிருத பாடல்களிலும் புகழ்ந்து கூறியிருக்கிறார். இந்தப் பஞ்சாசத்தையும், தண்டகத்தையும் படிப்போர், கேட்போர் விஷபயம் நீங்கி, கோரின பலன்கள் பெற்று ஆபத்து நீங்கி மகிழ்ந்து வாழ்வர். இந்தக் கருடன் சுவாமி வேதாந்த தேசி

கருக்கு ஹயக்ரீவ மந்திரத்தை உபதேசித்தார்.

ஸ்ரீவைகுண்ட உலகத்தில் எம்பெருமானுக்கு எப்போதும் கைங்கரியம் செய்பவர்கள் நித்திய சூரிகள். அவர்களில் அனந்தன் என்கிற ஆதிசேஷன், பெரிய திருவடி என்கின்ற கருடன், விஷ்வக்சேனர் எனும் மூவர் சிறப்பிடம் பெற்றவர்கள். இதிகாச புராணங்களில் அனந்த கருட விஷ்வக்சேனாதிகள் என்ற வரிசையில் நித்திய சூரிகள் கூறப்படுவார்கள்.

## பெரியாழ்வார்

பெரியாழ்வார் திருமொழியில் கருடனையும், அதன் நாதனான தென்னாடும், வடநாடும் தொழ நின்ற திருவரங்கம் திருப்பதியின் பள்ளிகொண்ட திருவரங்கத்தமுதனையும் பாடும் இப் பாசுரம்:

"ஆமையாய்க் கங்கையாய்
ஆழ்கடலாய்
அவனியாய் அருவரைகளாய்
நான்முகனாய் நான்மறையாய்
வேள்வியாய்த்
தக்கணையாய்த் தானுமானான்
சேமமுடைநாரதனார் சென்றுசென்று
துதித்திறைஞ்சக் கிடந்தான்கோயில்
பூமருவிப் புள்ளினங்கள் புள்ளரையன்
புகழ்குழறும் புனலரங்கமே"

மேலும்
"செருவாளன் புள்ளாளன்
மண்ணாளன்"

என்கிறார்.

கஜேந்திரன் என்னும் யானைக்கு மோட்சம் தர கருடாழ்வார் மேல் விரைந்த கண்ணனைப் பெரியாழ்வார் பாடும் இப்பாசுரம்:

"பதகமுதலை வாய்ப்பட்ட களிறு
கதறிக்கைகூப்பி என் கண்ணா!
கண்ணா என்ன
உதவப்புள்ளூர்ந்து அங்கு
உறுதுயர் தீர்த்த
அதகன் வந்து அப்பூச்சிகாட்டு-
கின்றான் அம்மனே!
அப்பூச்சிகாட்டுகின்றான்.

## ஆண்டாள் :

சூடிக்கொடுத்த சுடர்கொடி ஆண்டாள் தனது திருப்பாவையில் கூறுவதாவது:

"புள்ளும் சிலம்பினகாண்
புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம்
கேட்டிலையோ"

'இரவு கழிந்து காலை வரும் முன்னே பறவைகள் இரைதேடக் கூட்டம் கூட்டமாகச் சென்று கொண்டு இருக்கின்றன. பக்ஷிராஜனான கருடனுக்குத் தலைவனான எம்பெருமான் கோயிலில் வெண்சங்கின் பேரரவம் கேட்கிறது. பகவத் விஷயத்திற்குப் புதியவளான இளம் பெண்ணே! உறக்கம் விட்டு எழுந்திருப்பாய்! ஹரி என்று உச்சரித்த பெரிய சத்தம் உள்ளம் புகுந்து குளிரும்படி சென்று அடையாவாக!

இப்பாசுரத்தில் பள்ளினங்களையும், புள்ளரையனையும் பாடுகின்றாள் ஆண்டாள்.

## குலசேகராழ்வார்

குலசேகரப்பெருமான் தன் பெருமாள் திருமொழியில் திருவரங்கப்பெருமானைக் கண்டு 'என்று கொல் மகிழ்வேன்' என்று பாடிய பத்து பாசுரங்களில்,

"கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம்
கூனற் சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு கொற்ற
ஒள்வாள்
காலார்ந்த கதிக்கருட னென்னும்
வென்றிக் கடும்பறவை"

ஊழிக்காற்றின் வேகத்தையுடைய கருடன் என்னும் வெற்றி வீரனான 'புள்ளரையன்' பக்ஷி ராஜன் என்று பெரிய திருவடியைப் பாடுகின்றார்.

## திருமழிசைப்பிரான்

திருமழிசைப்பிரான் அருளிச் செய்த திருச்சந்தவிருத்தத்தில் பெரிய திருவடியாம் கருடன் மேல் பவனிவரும் பரந்தாமனை "புள்ளை ஊர்தி ஆதலில்" என்று பாடுகின்றார்.

பதிப்பகைஞர்க் காற்றது பாய்திரை
நீர்ப்பாழி
மதித்தடைந்த வாளரவந்தன்னை
மதித்தவன்றன்
வல்லாகத் தேற்றிய மாமேனி
மாயவனை
அல்லாதொன்றேத்தாதென் நா"

'பிறவிப் பகைவனான கருடனுக்கு அஞ்சிப் பெருமானை சரணமாக பாடிய சுமுகன் என்ற சர்ப்பத்தினை கருடன் மேலேயே ஏற்றிவிட்ட பரந்தாமனையன்றி மற்றொருவனைத் தோத்திரம் செய்யாது' என்று நான்முகன் திருவந்தாதியில் திருமழிசைப்பிரானின் பாசுரம் உயர்ந்த தத்துவப் பொருட்கொண்ட பாசுரமாகும்.

## தொண்டரடிப்பொடியாழ்வார்

திருவரங்கத்து அமுதன்மேல் ஆறாக் காதல் கொண்ட தொண்டரடிப்பொடியாழ்வார் தமது திருப்பள்ளியெழுச்சியிலே, பெரிய திருவடியை போற்றிப் பாடுகையில்:

"கிதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்
கந்தருவரவர் கங்குலுகளெல்லாம்
அரங்கத்தம்மா பள்ளியெழுந்-
தருளாயே"

என்று அரங்கத்தம்மானை பள்ளியெழுப்புகின்ருர்.

## திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் கருடனைப் பாடுகையில்:

"ஆனையின் துயரம் தீரப்புள் ளூர்ந்து
சென்றுநின் ருழிதொட் டானை"

என்று பெரிய திருமொழியில் கஜேந்திர மோட்சம் காட்சியைக் கண்முன் கொண்டு வருகிருர்.

திருச்சித்திரக்கூடத்திலுள்ள கோவிந்தராஜனை:

"வையத் தெவரும் வணங்க
அணங்கெழு
மாமலைபோல தெய்வபுள்
ளேறி வருவான்"

இராகவனாய் அம்பெய்து அரக்கனை அழித்துச் சீதையைக் காத்தும், குன்றெடுத்துக் கோநிரை காத்தும், நம்மனோர் வணங்க பெரிய மலைபோல் கருடன் மேல் ஏறிக்கொண்டு வருகிருன் என்று பாடுகின்ருர்.

திருநாகை இறைவனைப் பாடுகின்ற பாசுரத்தில்:

"அஞ்சிறைப் புள்ளுமொன்
றேறிவந்தார்
அச்சோ ஒருவர் அழகியவா"

என்று கருடனைக் குறிப்பிட்டுப் பாடுகின்ருர்.

திருமங்கைமன்னன் என்றும், குறையலூர் வாழ்வேந்தன் என்றும் போற்றப்படும் இவ்வாழ்வாரின் திருவெழுக்கூற்றிருக்கை என்னும் பாசுரங்களில் திருக்குடந்தை ஆராவமுதனின் திருவடிகளை சரணமாகப் பற்றுகிருர்.

'நாற்றிசை நடுங்க
அஞ்சிறைப் பறவையேறி'

கஜேந்திர ஆழ்வானைக் காப்பாற்ற அவன் துன்பத்தைக் கண்டு நாராயணன் கலங்கிய கலக்கத்தில் நாற்றிசைகளிலுள்ள தேவர்கள் நடுங்க, கருடாழ்வான் மேல் ஏறித் தன் சக்கரப்பொறியாலே முதலையை அழித்து ஆனையின் துயர் தீர்த்தாய்! இதனையே சிறிய திருமடலில் கலியன் பாடுகிருர்.

"நாராயணு! ஓ மணிவண்ணு! நாகணையாய் வாராயென்னாரிடரை நீக்காய்! என வெகுண்டு தீராத சீற்றத்தால் சென்றிரண்டு கூருக ஈராவதனை யிடர் கடிந்தான்."

'கருடாழ்வாரை ஓட்டுவிக்கும் கண்ணனே என்னைவிட்டு நீ போகாதே என்று சொல்லுவேன். உன்னைவிட்டு என்னால் பிரிய இயலாது' என்று ஆற்ருமையால் தலைவி பாடுகின்ருள்.

## பொய்கையாழ்வார்

முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வார் தன்னுடைய முதல் திருவந்தாதியில்:

"படையாழி புள்ளூர்தி
பாம்பணையான் பாதம்
அடையாழி நெஞ்சே! அறி"

என்று பாடுகின்ருர். பெரிய திருவடியை வாகனமாகக் கொண்டு இவ்வுலகை இரட்சிக்கின்ற திருமாலின் பாதத்தைப் போற்றுங்கள் என்கிருர்.

இன்னொரு பாடலில்:

"ஏற்ருன் புள்ளூர்ந்தான்
எயிலெரித்தான் மார்விடந்தான்
நீற்ருன் நிழல் மணிவண்ணனைத்
தான்"

என்று கருடப்புள் ஏறின கண்ணனைப் பாடுகின்ருர். நீள் கழலையுடைய திருமால் இரணியன் மார்பை பிளந்தவன், கருடப்புள் ஊர்பவன், கங்கைக்குப் பிறப்பிடமான நீண்ட திருவடியுடையவன் திருமகளை மார்பில் கொண்ட திருமாலாவான்.

## பேயாழ்வார்:

பேயாழ்வார் தமது மூன்ருவது திருவந்தாதியில்:

"கழல்தொழுதும்வா நெஞ்சே!
கார்க்கடல் நீர்வேலை
பொழிலளந்த புள்ளூர்திச் செல்வன்"

என்றும்,

(ஓ நெஞ்சே! திருமால் திருவடிகளை வணங்குவோம். பூவுலகைத் திரிவிக்ரமனாய் திருவடி கொண்டு அளந்தவன், கருடவாகன அழகன், நெடுந்தூரத்திலிருப்பவன், அவனைத்தொழுவோம்.)

பெரிய திருவடிமேல் காட்சி தருகின்ற திருமாலை,

"பொலிந்து கருடன்மேல்
கொண்ட கரியான்கழலே
தெருடன்மேல் கண்டாய் தெளி"

என்றும் பாடுகின்ருர்.

(விளங்குகின்ற கருடன்மேல் பெருமாள் அமர்ந்து நடத்துபவன். கருநிறமுடைய பெருமான் திருவடிகள் ஞானத்திற்கு மேம்பட்டதான பக்தி விஷயம் என்று தெளிந்துகொள்.)

## பூதத்தாழ்வார்

இரண்டாம் திருவந்தாதியில் பூதத்தாழ்வார், கருடனைக் கொடியாகக் கொண்ட கோவர்த்தனனைப் பாடுகின்ற அந்தப் பாசுரமாவது:

"அடியால் முன்கஞ்சனைச் செற்று
அமரரேத்தும்
படியான் கொடிமேல் புள்கொண்டான்
-நெடியான் தன்
நாமமே ஏத்துமின்கள்; ஏத்தினால்

தாம் வேண்டும்
காமமே காட்டும் கடிது"

திருவடியால் கம்ஸனை வதம் செய்தவனும், தேவர்களால் போற்றுபவனும், கொடியில் கருடப்புள்ளை உடையவனும், அடியார்களை ஆட்செய்பவனும் ஆன கண்ணனை துதிசெய்து பயன் விரைவாகப்பெறுவீர்.

இன்னொரு பாசுரத்தில்:

"அத்தியூரான் புள்ளையூர்வான்
அணிமணியின்
துத்திசேர் நாகத்தின் மேல்
துயில்வான்"

என்கின்றார்.

நம்மாழ்வார்:

நாவலர்பெருமாள் பெரிய திருவடி என்னும் புள்ளேறி வருகின்ற திருமாலைப் பாடும் போது:

ஓடும் புள்ளேறி சூடுந்தண்குழாய்
நீடுநின்றவை ஆடுமம்மானே"

என்கின்றார்.

(யாவரினும் பெரிய திருமால் கருடன் மேல் வருவான்; குளிர்ந்த திருத்துழாய் மாலை சூடிக்கொள்வான்; எக்காலமும் அருளுடன் நம்மை பரிபாலிப்பவன்.)

இன்னும் ஒரு பாசுரத்தில் ஞான தேசிகன் நம்மாழ்வார்,

"பொருசிறைப்புள் ளுவந்தேறும்
பூமகளார் தனிக்கேள்வன்"

என்று கூறுகின்றார்.

(சிறகடிக்கும் கருடப்பறவை மீதேறி மகிழும் திருமகள் கேள்வார் என்னை நீங்காமல் நிற்கின்றார்.)

மற்றுமொரு பாசுரத்தில், போதக்கடல் அமுதக்கவி,

"மேனிநின்று தொழுவார் வினைபோக
மேவும்பிரான்
தூவியம் புள்ளுடையான் அடலாழி
யம்மான் தன்னை"

என்று சங்கு சக்கரங்களைக் கொண்ட திருமால் தெய்வப் புள்ளேறி வருகின்ற காட்சியைக் கண்முன் கொணர்கின்றார்.

திருமங்கையாழ்வார் கூறும் "நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்று நாராயணனிடம் சரண் அடைவதைத் தவிர வேறுவழியில்லை என்பது போல், நம்மாழ்வாரும் ஆதிபிரானை அடிமை புகுவது அல்லால், வேறு உபாயம் இல்லை என்று கூறும் பாசுரத்தில்,

"கூடி வானவ ரேத்தநின்ற
திருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடி யாதி மூர்த்திக்கு
அடிமை புகுவதுவே"

என்று கருடனை கொடியாகக் கொண்ட ஆதிமூர்த்தியைப் பாடுகின்றார்.

புள்ளினங்களைத் தூதுவிடும் 6ஆம் பத்து, 8ஆம் திருவாய்மொழி பாசுரத்தில் திருவழுதி வளநாடன்,

"வெங்கண் புள்ளூர்ந்து வந்து
வினையேனை நெஞ்சங்கவர்ந்த
செங்கண் கருமுகிலைச் செய்யவாய்ச்
செழுங் கற்பகத்தை
எங்குச் சென்றாகிலும் கண்டு
இதுவோ தக்கவா"

என்று பாடுகின்றார்.

(கொடிய கண்களையுடைய பெரிய திருவடி ஏறிவந்து, என் நெஞ்சங் கொள்ளை கொண்ட சிவந்த திருவாயுடைய கற்பகம் போன்ற பகவானை, நான் வளர்த்த கிளிகளே, என்னிடம் அருள் காட்டாதிருப்பது தகுதியோ [illegible]று கேளுங்கள்.)

பெரிய திருவடியைக் கொடியாகக் கொண்ட கோவிந்தன் பெரிய திருவடிமேல் அமர்ந்து காட்சி தருகின்ற திருமாலை,

"ஆடல் பறவை யுயர்த்தவெல்போர்
ஆழி வலவனை யாதரித்தே"

என்றும்,

திருவேங்கடத்துத் திருமாலைத் திருக்குருகூரான் பாடுகின்ற போது,

"அடியேன் மேவியமர்கின்ற வமுதே
இமையோ ரதிபதியே
கொடியாவடுபுள்ளுடையானே கோலக்
கனிவாய்ப் பெருமானே"

என்றும் பாடுகின்றார்.

(இதன் பொருள்: "திருவேங்கடவனை அநுபவிப்பதைத் தவிர வேறு பயன் கருதாத அடியேனிடத்து வந்து தங்கியுள்ள அமுதமே! நித்திய சூரித்தலைவனே! விரோதிகளை அழிக்கும் இயல்பையே உடைய கருடனைக் கொடியாகக் கொண்டவனே! அழகிய சிவந்த உதட்டின் கோலத்தில் என்னை அடிமைகொண்ட ஸ்ரீநிவாசனே!")

காரிமாறனின் ரிக்வேதசாரமான திருவிருத்தத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி வாடைக்கு ஆற்றாது வருந்தி கூறும்போது, "தனிநெஞ்சம் முன்னவர் புள்ளே கவர்ந்தது" என்று பாடுகின்றார். இதன் பொருளாவது:

'எம்பெருமானுடைய கருடஊர்தி என் நெஞ்சைக் கவர்ந்து சென்று விட்டது; மிச்சம் மீதியிலாது எந்நெஞ்சம் கவரப் பட்டுவிட்டதால் இனி எனக்கு வேறு நெஞ்சமில்லையே' என்று அழற்றுகிறாள்.

கார் காலத்தில் வருகிறேன் என்ற நாயகன் வாராததால் தலைவி அவன் நினைவில் வருந்துவதைக் குறிப்பி

டும்போது மகிழ்மாலை மாற னின் திருவிருத்தத்தில், கரு டனை ஊர்தியாகக் கொண்ட கருணாகரனை "சாரிகைப் புள் ளர்" என்கின்றார். அதாவது விரைந்து வட்டமாக ஓடும் கரு டப் பறவையை ஊர்தியாகக் கொண்ட எம்பெருமானின் திருத் துழாய் மாலையை பெறமாட் டாது தலைவி நோகிறாள் என் கின்றார்.

இன்னொரு பாசுரத்தில் "நிரைகாத்த புள்ளூர்தி" என்று கண்ணன் கருடன் மீது ஏறி யிருந்து கோவர்தன கிரியைக் குடையாக்கி ஆநிரை காத்த தைப் பாடுகிறார்.

பெரிய திருவடியின் அம்ச மாகக் கருதப்படும் பெரியாழ் வார் தோன்றிய திருவில்லிப் புத்தூரில், சூடிக்கொடுத்த சுடர் கொடியும், ரங்கமன்னாரும், கரு டாழ்வாரும் அருகருகே நின்ற கோலத்தில் காணலாம். அவ் வண்ணமே தேரழுந்தூர் திருப் பதியில் ஆமருவியப்பன் சன்ன தியில் நெடுமாலுடன் வலது புறம் பிரகலாதாழ்வாரும் இடது புறம் பெரிய திருவடியும் நின்ற வண்ணம் காட்சி தருகின்றனர்.

திருவள்ளியங்குடி கோல வல் வில்ராமன் சன்னதியில் கரு டாழ்வாரை சங்கு சக்கரங் களுடன் காணலாம்.

'திருவதரி' எனும் பத்ரியாச் ரமத்துள் பெரிய திருவடியாம் கருடன் நர, நாராயணர், குபே ரர், கணேசருடன் திருமகள் சமேத பத்ரி நாராயணர் காட்சி தருகின்றார்.

நாச்சியார்கோவில் என்னும் திருநறையூரில் கருடவாகனம் ஒப்பற்ற கருங்கல்லால் ஆகிய வாகனமாகும். "காணக்கண் கோடி வேண்டும்" என்னுமாப் போலே கருடனின் சன்னதியும், அவன் பெரிய திருவுருவும் திருவரங்கத் திருப்பதியிலேயே காணலாம்.

தை மாதம் அமாவாசை மறு நாள், திருநாங்கூர் 11 கருட சேவையும், தேவாதி தேவ ராஜன் காஞ்சிநகரிலே வைகாசி விசாகமன்று தெய்வப் புள்ளேறி இரட்டைக்கொடை போட்டு வெற்றிநடைபோடும் காட்சியும், ஆழ்வார்திருநகரியில் 6 கருட சேவையும், அக்ஷய திருதி யில் திருவரங்கத்தில் மாசிக்க ருடனும், திருக்குடந்தையில் 18 கருடசேவையும் ஆகியன இன் றும் என்றும் திரளாக மக்கள் வெள்ளம் சூழ மாதவனையும், தெய்வப் புள்ளான கருடனை யும் வழிபாடு செய்து வருகின்ற மரபாக விளங்குவது பறவை யினத்துக்கு நாம் செய்யும் அஞ் சலியாகும்.

(தொடரும்)



## இறைவருக்கு உகந்தவை

| | | |
|---|---|---|
| பிள்ளையாருக்கு | -- | -அருகம்புல் |
| சிவபெருமானுக்கு | -- | -வில்வம், கொன்றை |
| முருகனுக்கு | -- | -வெட்சிப்பூ, கடம்பு |
| அம்மைக்கு | -- | -நீலோற்பம் |
| சூரியனுக்கு | -- | -தாமரை |
| திருமகளுக்கு | -- | -ஆம்பல் |
| கலைமகளுக்கு | -- | -வெண்தாமரை |

தொகுத்தவர்: கமலா மாரியப்பன் - கோவை.

## தெய்வங்களும் வாகனங்களும்

| | | |
|---|---|---|
| பகவான் | -- | -கருடன் |
| லக்ஷ்மி | -- | -ஆந்தை |
| சிவபிரான் | -- | -எருது |
| பார்வதி | -- | -சிங்கம் |
| விநாயகர் | -- | -மூஞ்சூறு & பெருச்சாளி |
| சுப்ரமணியர் | -- | -மயில் |
| ஐயப்பன் | -- | -புலி |
| பிரம்மா | -- | -அன்னம் |
| சரஸ்வதி | -- | -அன்னம் |

சூரியனுக்கும் சமிக்ஞை என்ற மனைவிக்கும் யமதர்மரா ஜன் பிள்ளையாவார். மற்றொரு மனைவியான சாயா தேவிக்குப் பிறந்த மகனே சனீஸ்வரன் என்று பின்னாளில் பட்டம் பெற்ற சனி ஆவார். யமதர்மராஜனின் வாகனம் எருமை மாடு. சனீஸ்வரனின் வாகனம் காகம்.

தொகுத்தவர்: ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage. Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being.

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind. TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and also a central hospital. To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated super speciality centre on the lines of AIIMS of New Delhi & JIMPER of Pondicherry and PGI of Chandigarh. Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development.

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren.

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme. To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public.

**The Scheme in essence:**

A donor can make an endowment of Rs. 1000/- or multiples thereof / Rs. 1 lakh / Rs. 5 lakhs / Rs. 10 lakhs to T.T. Devasthanams which will in turn contribute matching grant. The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy.

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs. 10 lakhs or above. These endowment chairs are purely research oriented.

- Donations can be made by any individual / family / company / firms etc.
- The name of the donor who endows Rs. 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
- The discharge ticket of the benefited patient will carry the name of the donor.

**Additional Benefit and facilities :**

- Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
- Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital.
- Paid rooms can be named after donors who contribute a sum of Rs. 5 lakhs or above.
- By paying Rs. 5 lakhs and above, a donor may sponsor one operation per year.
- Donors can sponsor feeding of the In-patients and out-patients. They may also sponsor a travel fellowship for the faculty per year.

All donations, by D.Ds. drawn in favour of The Executive Officer, T.T. Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars.

- Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs. 1 lakh or more.
- Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued.

The donors are also welcome to offer equipment, vehicles etc. to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire. Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**



# SAPTHAGIRI 1996




**JANUARY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | 31 | * | * | * |

**FEBRUARY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | * | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | * | * |

**MARCH**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 31 | * | * | * | * | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 |
| 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |

**APRIL**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | * | * | * | * |

**MAY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | 30 | 31 | * |

**JUNE**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 30 | * | * | * | * | * | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |

**JULY**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | 31 | * | * | * |

**AUGUST**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | * | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 |

**SEPTEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | * | * | * | * | * |

**OCTOBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | 29 | 30 | 31 | * | * |

**NOVEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| * | * | * | * | * | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 |
| 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |

**DECEMBER**

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | 31 | * | * | * | * |

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# Sri Venkateswara Vanabhivriddhi Scheme

## An Appeal . . .

*He that planteth a tree is the servant of God*
*And Provideth a kindness for many generation*
*And faces that he, hath not seen shall bless him*

Sacred Forests of Tirumala are the precious gift of Lord Venkateswara to mankind. With a view to safeguarding its unique yet delicate ecological condition, Tirumala Tirupati Devasthanams have introduced a series of exciting schemes called **Sri Venkateswara Vanabhivriddhi Schemes**. The Schemes seek to provide a rare opportunity to the public for participation in a massive plantation project implemented by the Forest Department of T.T. Devasthanams.

The salient features of Sri Venkateswara Vanabhivriddhi Schemes are:

**VRIKSHA SAMVARDHANAM :** Under this Scheme, about one acre of land will be brought under plantation.

**Benefits :**

* Plantation will be named after the donor or person of his choice.
* Every year free accommodation on 2 ordinary days at Tirumala for 10 years.
* One paid special darshan every year for 5 persons for 10 years

**Donation :** Rs. 15,000.

**VRIKSHA PRASADAM :** The Scheme is proposed for raising 100 fruit and flowering seedling every year.

**Benefits :**

* Distribution of one hundred seedlings, both fruit bearing and flowering in the donor's name every year.
* Two days free stay at Tirumala every year on any ordinary days for 10 years.
* One paid special darshan every year for five persons for 10 years.

**Donation :** Rs. 10,000.

**SMARAKA VANALU :** Under this scheme 10 saplings of selected species will be planted in a grove and maintained for five years.

**Benefits :**

* The grove will be named after the donor.
* Every year paid special darshan for five persons for five years.

**Donation :** Rs. 2,000.

**VANA SAMRAKSHANA BHAGA SWAMYAM :** is proposed to protect and improve the natural forest cover on Tirumala hills.

**Benefits :**

* Diplay of the donor's name.
* Paid special darshan for five persons for one year.

**Donation :** Rs. 1,000.

**ADHYAYANA VANALU :** Plantation and maintenance of a variety of species will be taken up under this scheme in the proposed botonical garden at Tirumala.

**Benefits :**

* Display of donor's name near the plant.

**Donation :** Rs. 500.

**VRIKSHA DATTATA :** is a bold scheme featuring adoption and plantation of avenue trees on the ghat road and at Tirumala.

**Benefits :**

* Display of donor's name.

**Donation :** Rs. 250.

We appeal to all devotees to donate liberally and help us to preserve the priceless forest wealth of Tirmala - The Abode of LORD VENKATESWARA.

Please send your donations by Demand draft to the **The Executive Officer, T. T. Devasthanams, TIRUPATI - 517 507.**

EXECUTIVE OFFICER

# கோமாதா

டாக்டர். டி.ஜி. அனந்தசுப்ரமணியன் - சிதம்பரம்.

பாரத தேசத்தில் இயற்கைகளை வழிபடுவதென்பது தொன்று தொட்டு வந்துள்ள மரபாகும். அதேபோல் பிராணிகளையும் தெய்வங்களாக வழிபட்டு வருவதை இன்றும் பார்க்கிறோம். இவைகளுக்கு உதாரணமாக சில பண்டிகைகளைக் கூறலாம். பொங்கல் பண்டிகையன்று சூரியனையும், மறுநாள் பசுக்களையும் வழிபடுவதைக் காணலாம். இவையெல்லாம் பாரததேசத்தின் பண்பாடாகும். மரபாகும். உலகில் பிராணிகள் எத்தனையோ உள்ளன. அவைகளுக்குள் கோ (பசு) மிகவும் போற்றப்பட்டு அதனைத் தெய்வமாக நம் பாரத தேசத்தில் வழிபட்டு வருகிறார்கள். பசுவின் பால் சாஸ்த்திரத்திற்கும், வைத்யத்திற்கும், தெய்வ வழிபாட்டிற்கும் முக்ய மானதாகும். பசுவின் பாலை குழந்தைமுதல் வயது வந்தவர்கள் முடிய எல்லோரும் உணவாகக் கொள்கிறார்கள். ஆயுர்வேத வைத்யமுறையில் பசுவின் பாலுக்கு ஓர் முக்ய இடமுண்டு. அதேபோல் தெய்வ வழிபாட்டில் தெய்வங்களுக்கு அபிஷேகப் பொருளாக உபயோகப்படுத்தப்படுகிறது. இதற்கெல்லாம் காரணம் பசுவின் உடலில் எல்லா தேவதைகளும் வசிக்கின்றனர். ஆகையால் பசுவை (கோ) தெய்வமாக (கோபூஜை) வணங்குகிறோம். பசுவின் உடலில் என்னென்ன தெய்வங்கள் இருக்கின்றன.

"ச்ருங்கயோச்ச ஸ்திதௌ நித்யம்
ஸஹைவ ஹரகேசவௌ ।
உதரே அவஸ்தித: ஸ்கந்த: சீர்ஷே
ப்ரம்மா ஸ்தித: ஸதா ॥
வ்ருஷத்வஜோ லலாடே ச
ச்ருங்காக்ர இந்த்ர ஏவ ச ।
கர்ணயோரச்விநௌ தேவௌ
சக்ஷுஷோ: சசிபாஸ்கரௌ ॥
தந்தேஷு கருடா தேவோ
ஜிவ்ஹாயாம் ச ஸரஸ்வதீ ।
அபாநே ஸர்வதீர்த்தானி
ப்ரஸ்ராவே சை ஜாந்நவீ ॥
ரிஷயோ ரோமகூபேஷு முக்த:
ப்ருஷ்டதோயம: ।
கோமயே வஸதே லக்ஷ்மீ:
கோமூத்ரே சர்வமங்களா ॥
சத்வார: ஸாகரா: பூர்ணா:
தேநூநாம் ச ஸ்தனேஷுவை ॥
(பத்மபு-57)

இரண்டு கொம்புகளில் ஹரனும், கேசவனும், வயிற்றில் முருகனும், தலையில் ப்ரம்மனும், நெற்றியில் மகாதேவனும், கொம்புகளின் நுனியில் இந்திரனும், காதுகளில் அச்விநீ தேவதைகளும், கண்கள் இரண்டிலும் சூர்யசந்திரர்களும், பற்களில் கருடனும், நாக்கில் ஸரஸ்வதியும், கோமயம் வரும் வழியில் எல்லா புண்யதீர்த்தங்களும், கோமூத்ரத்தில் கங்கையும், ரோமங்களில் ரிஷிகளும், முகத்திலும் பின்பாகத்திலும் யமனும், கோமயத்தில் லக்ஷ்மியும், மடிக்காம்புகளில் நான்கு ஸமுத்ரங்களும் உள்ளன. இன்னும் பல அவயங்களில் பலதேவதைகள் இருக்கின்றன. ஆகையால் கோவை பூஜை செய்து வழிபட்டால் எல்லா தெய்வங்களையும் வழிபட்ட புண்யம் உண்டாகும் என்று பத்மபுராணம் கூறுகிறது.

"காவோ பந்தூர் மனுஷ்யாணாம்
மநுஷ்யா பாந்தவா கவாம் ।
கௌச்ச யஸ்மின் க்ருஹே நாஸ்தி
தத் பந்துரஹிதம் க்ருஹம் ॥

மனிதர்களுக்கு பந்துக்கள் பசுக்கள், பசுக்களுக்கு பந்துக்கள் மனிதர்கள். எந்த வீட்டில் பசுக்கள் இல்லையோ அந்த வீடு பந்துக்கள் அற்றவை போலும்.

"கோமயம் ரோசனா மூத்ரம்
க்ஷீரம் ததி க்ருதம் கவாம் ।
ஷடங்காணி பவித்ராணி ஸம்சுத்தி
கரணனிச ॥"

பசுவின் கோமயம் (சாணம்) ரோசனை (கோரோசனை - இது பசுவின் தலையிருப்பது). மூத்ரம், பால், தயிர், நெய் முதலியவைகள் பரிசுத்தமானவைகள். அத்துடன் சுத்தம் செய்பவைகளாகவும் ஆகும்.

"கோமயாதுத்தித: ஸ்ரீமான் பில்வ
வ்ருக்ஷ: சிவப்ரிய: ।
தத்ராஸ்தே பத்மஹஸ்தா ஸ்ரீ:
ஸ்ரீவ்ருக்ஷஸ்தேன ஸ ஸ்ம்ருத: ॥

கோமயத்திலிருந்து பில்வமரம் உண்டாகிறது. அது சிவனுக்கு மிகவும் பிரியமானது. அந்த பில்வ மரத்தில்தான் லக்ஷ்மீ வஸிக்கிறாள். ஆகையால் பில்வமரத்தை ஸ்ரீவ்ருக்ஷம் என்று கூறுகிறார்கள். "பில்வ நிலயாய நம:" என்பது லக்ஷ்மீ அஷ்டோத்ரம்.

"ப்ராம்மணாச் சைவ காவச்ச
குலமேகம் த்விதா க்ருதம் ।
ஏகத்ர மந்த்ராஸ் திஷ்டந்தி
ஹவிரன்யத்ர திஷ்டதி ॥"

அந்தணர்களும் - பசுவும் ஒரே குலம். ஆனால் அந்தணர்களி

டத்தில் மந்திரங்களும், பசுவினிடத்திலும் ஹவிஸ்ஸும் இருக்கிறது. பசுவின் பால், தயிர், நெய் இவைகள் ஹோமங்களுக்கு ஹவிஸ்ஸாகவும், இறைவனுக்கு அபிஷேகத்ரவ்யமாகவும் உபயோகப்படுகின்றன.

வைத்தியத்திற்கும் பசு உபயோகப்படுகிறது. தந்வந்தரி ஸம்ஸ்க்ருத ஸம்ஹிதை என்ற நூலில்:

"கோமூத்ரம் கோமயம் க்ஷீரம் ததி
ஸர்பிச்ச ரோசனா।
ஷடங்கம் பரமம் பானே
துஸ்ஸ்வப்னாத்யாதி வாரணம்॥"

பசுவின் மூத்ரம், கோமயம், பால், தயிர், நெய், கோரோசனை முதலியவைகளை சாப்பிட்டால் உடலில் உள்ள ரோகங்கள், கெட்ட கனவுகள் முதலியவைகள் உண்டாகாது. மேலும் பசுவின் மூத்ரம், கோமயமும், சுத்தத்திற்கு மிகவும் உபயோகப்படுகிறது.

"கோமயேனோவிப்தம் து சுசி
ஸ்தானம் ப்ரகீர்த்திதம்।
அக்ந்யாகாரம் ஸுராகாரம்
கோமயேனோபலேபயேத்॥

கோமயே து ஸதா லக்ஷ்மீ:
ஸ்வயமேவ வ்யவஸ்திதா।
கோமூத்ரே ச ததா கங்கா ததி
க்ஷீர க்ருதேஷு ச॥"

கோமயத்தினால் வீடு, பூஜை அறை, யாகசாலை முதலியவைகளை மெழுகிச் சுத்தம் செய்தால் லக்ஷ்மியின் அருள் கிடைக்கும். கோமயத்தில் (சாணம்) லக்ஷ்மி வசிக்கிறாள். கோமூத்திரம், பால், தயிர், நெய் முதலியவைகளிலும் கங்கை வசிக்கிறாள் என்று விஷ்ணுதர்மோத்தர புராணம் கூறுகிறது.

"ஸ்ப்ருஷ்டாச்ச காவ: சமயந்தி
பாபம்।
ஸம்ஸேவிதாச்சோபநயந்தி வித்தம்॥
தா ஏவ தத்தாஸ்திரிதிவம் நயந்தி।
கோபிர் ந துல்யம் தனமஸ்தி
கிம்சித்॥"

பசுவைத்தொட்டாலே செய்த பாவங்கள் அகலும். பசுவைக் காப்பாற்றி வளர்த்தால் தனம் சேரும். பசுவை தானம் செய்தால் மூன்று லோகங்களையும் அடையலாம். ஆகையால் பசுவிற்குச் சமமான தானம் கிடையாது என்று விஷ்ணுதர்மோத்தரபுராணம் கூறுகிறது.

"கவாம் கண்டூயநாத் மர்த்ய:
ஸர்வம் பாவம் வ்யபோஹதி।
தாஸாம் க்ராஸப்ரதானேன
மஹத்புண்யமவாப்நுயாத்॥
தாஸாம் ச ப்ரசரம் க்ருத்வா
ததைவ ஸலிலாசயம்।
ஸ்வர்கலோகமுபச் நந்தி
பஹுந்யப்த கஞனி து॥
தாஸாம் ப்ரசாரபூமிம் து க்ருத்வா
ப்ராப்னோதி மானவ:।
அச்வமேதஸ்ய யக்ஞஸ்ய பலம்
ப்ராப்னோத்யஸம்சயம்॥
தாஸாமாவஸதம் க்ருத்வா
நகராதிபதிர் பவேத்।
ததா லவணதானேன
ஸௌபாக்யம் மஹதச்நுதே॥

பசுவை சொறிந்து கொடுப்பதால் செய்த பாபங்கள் போகின்றன. அவைகளுக்குப் புல் கொடுப்பதால் நற்பேற்றைப் பெறுவான். அவைகளை மேய்த்தால், குளிப்பாட்டினால் பல ஆண்டுகள் ஸ்வர்கலோகத்தில் வசிப்பான். அவைகளுக்கு மேய்ச்சல் இடம் தயார் செய்து கொடுத்தால் அச்வமேதயாகம் செய்த பலனை அடைவான். அவைகளுக்குக் கொட்டில் (கோசாலை, பசுமடம்) முதலியவைகளைக் கட்டிக்கொடுத்தால் நகரத்தலைவனாவான். அவைகளுக்கு உப்பு சாப்பிடக் கொடுத்தால் நல்ல மாங்கல்யத்தைப் பெறுவான்.

"கோபிர் விப்ரைச்ச வேதைச்ச
ஸதீபி: ஸத்யவாதிபி:।
அலுப்தை: தானசீலைச்ச ஸப்தபி:
தார்யதே மஹீ॥

பசுக்களாலும், அந்தணர்களாலும், வேதங்களாலும் நல்ல பதிவ்ரதைகளாலும், உண்மையைப் பேசுபவர்களாலும் பேராசையற்றவர்களாலும், தானசீலர்களாலும் இந்த ஏழு பேர்களால் இந்த பூமி நிலையாக நிற்கிறது என்று பத்மபுராணம் கூறுகிறது.

"ஏகதா து சரந்தீம் காம்
வாரயாமாஸ வை பவான்।
தேந பாபவிபாகேன நிரயத்வார
தர்சனம்॥"

கவாம் ஸேவா து கர்தவ்யா
கிருஹஸ்தை: புண்யவிப்ஸுபி:।
கவாம் ஸேவாபரோ யஸ்து தஸ்ய
ஸ்ரீர்வர் ததே அசிராத்॥

இத்தகைய பெருமை வாய்ந்த பசுக்களைக் கொல்லக்கூடாது. அவைகள் மேய்க்கும் இடத்தைத் தடுக்கக்கூடாது. தண்ணீர் குடிக்கும்போது தடுக்கக்கூடாது. அவ்விதம் செய்தால் அவன் நரகத்திற்குப் போகிறான். பசுக்களுக்கு ஸேவை செய்ய வேண்டும். கிருஹஸ்தர்கள் வீட்டில் பசுக்களை வளர்த்து பூஜை செய்தால் லக்ஷ்மீ கடாக்ஷம் உண்டாகும் என்று பாத்மம் கூறுகிறது.

"கோக்ருதே ஸ்த்ரீக்ருதே சைவ
குருவிப்ரக்ருதே பி வா।
ஹந்யந்தே யே து ராஜேந்த்ர
சக்ரலோகம் வ்ரஜந்திதே॥"

பசுக்களின் பொருட்டும், பெண்களின் பொருட்டும், ஆசார்யன், அந்தணர் இவர்களைக் காப்

பாற்றுவதற்காகக் கொலை முதலிய பாதகங்கள் செய்தால்கூட ஸ்வர்க்கத்தை அடைகிறுன்.

"கோமூத்ரே த்ரிதினம் ஸ்தாப்ய
விஷம் தேன விசுத்யதி"

விஷத்தை மூன்று தினங்கள் கோமூத்ரத்தில் வைத்திருந்தால் விஷம் சுத்தமாகி விடுகிறது என்று ஆயுர்வேத சாஸ்த்ரம் கூறுகிறது.

"கவாம் ரஜ: குரோத்பூதம் சிரஸா
யஸ்து தாரயேத்।
ஸ ச தீர்த்த ஜலே ஸ்நாத:
ஸர்வபாபை: ப்ரமுச்யதே।।

பசுவின் குளம்பிலிருந்து உண்டான தூளியை எவனொருவன் சிரஸில் தரிக்கிறுனோ அவன் ஸகலவித புண்யதீர்த்தங்களில் ஸ்நாநம் செய்த பலத்தை அடைகிறுன். மேலும் பசுவை பூஜை செய்து வழிபட்டால் பிள்ளைப் பாக்யத்தையும் அடையலாம்.

"ரிஷபாம் ச்சாபி ஜநாமி ராஜன்
பூஜிதல க்ஷணன்।
யேஷாம் மூத்ரமுபாக்ராய அபி
வந்த்யா ப்ரஸூயதே"
--(ம.பா.வி.)

பசுக்களின் மூத்ரத்தின் வாஸனையை முகர்ந்தால் மலடியாக உள்ளவள்கூட குழந்தைப் பேறு பெருவாள். இதற்கு உதாரணமாக ஸுர்யகுலத்தில் பிறந்த திலீபன் மகப்பேறு இல்லாமல் தன் மனைவியான ஸுதக்ஷிணையுடன் தன்குல குருவான வசிஷ்டரின் கட்டளையினால் தன் ஆச்ரமத்தில் வளர்ந்து வந்த நந்திநீ என்ற பசுவை பூஜை செய்து வந்தான். அதற்கு வேண்டிய புற்களையும், தண்ணீரையும் கொடுத்து அதனுடன் பின் தொடர்ந்து மேய்க்கும் இடத்திற்குச் சென்று ஸேவை செய்து வந்தான். அதனால் மகிழ்ச்சியடைந்த நந்திநீ தன் பாலைச் சுரந்து கொடுத்து பருகச் செய்தது. திலீபனுக்கும் ஸுதக்ஷிணைக்கும் ரகுமகாராஜா பிறந்தான். அவனே ஸ்ரீராமருக்குப் பிதா மஹன் ஆனான். இவ்விதம் கோவிற்குப் பணிவிடை செய்வதால் செல்வம் உண்டாகும்.

கோ ஸேவையினால் ஆன்மீகப் பிரம்மஞானம்கூட உண்டாகும் என்று சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது. ஒரு ஊரில் ஜபாலா என்ற அந்தணஸ்த்ரீ இருந்தாள். அவளுக்கு ஸத்யகாமன் என்று மகன். அவன் கல்வி கற்க ஆசைப்பட்டு தன் தாயிடம் தன் கோத்ரத்தைப் பற்றிக்கேட்டான். தாயானவள் "குழந்தாய் நான் அதிதி ஸேவையில் இருந்ததால் கோத்ரத்தை அறிந்து கொள்ளவில்லை. ஆனால் நீ ஆசாரியர் உன்கோத்ரம் என்னவென்று கேட்டால் ஜபாலாவின் மகன் ஸத்யகாமன் என்று கூறுவாய்" என்று சொல்லி அனுப்பிவைத்தாள். ஸத்யகாமன் தன் ஆசார்யனான கௌதமரிடம் 'ஜபாலா ஸத்யகாமன் வந்திருக்கிறேன். தங்களிடம் கல்வி கற்க விரும்புகிறேன்' என்றுன். கௌதமர் 'நீ உண்மையைச் சொன்னதால் நீ அந்தணச் சிறுவனாகத்தான் இருக்க வேண்டும்' என்று கூறி உபநயனம் செய்து வைத்து அவனுக்கு நான்கு பசுக்களைக்கொடுத்து 'நீ இவைகளை காடுகளில் மேய்த்து இந்த நான்கும் ஆயிரம் பசுக்களாக ஆன்பிறகு வந்து சேருவாய்' என்ருர். அப்படியே குருவே என்று பசுக்களை ஓட்டிச்சென்றுன். கொஞ்சநாட்களிலேயே ஆயிரம் ஆகிவிட்டன. அவைகளில் இருந்த ஒருகாளை அவனிடம் 'எப்பொழுது எங்களைத் திருப்பி அழைத்துச் செல்லப்போகிறுய்' என்று கூறி 'உனக்கு பிரம்மத்தின் தத்வமாக முதல் அடியைக் கூறுகிறேன். 'ப்ரகாசஸ்வரூபம் ப்ரம்மம்' என்றது. இரண்டாவது அடியை அக்னி பகவான் கூறுவார் என்றது. ஸத்யகாமன் கொஞ்சதூரம் சென்றவுடன் இரவில் தங்குவதற்காக அக்னியை மூட்டினான். அக்னி அவனுக்கு "அனந்தம்" என்ற இரண்டாவது அடியைக் கூறி மூன்ருவது அடியை ஹம்ஸம் கூறும் என்ருர். மூன்ரும் நாள் மாலையில் ஒரு குளக்கரையில் தங்கினான். அங்கே ஒரு அன்னப்பறவை வந்திரங்கி ப்ரம்மத்தின் மூன்ருவது அடியான "ஜ்யோதிஷ்மான்" என்றதைக்கூறி நான்காவது அடியை ஒரு நீர்கோழி கூறும் என்றது. ஸத்யகாமன் நான்காவது நாள் ஒரு ஆலமரத்தடியில் உட்கார்ந்திருந்தான். அங்கே ஒரு நீர்கோழி ஸத்யகாமனுக்கு நான்காவது அடியான "ஆயதன ஸ்வரூபம்" என்றது. இவையெல்லாவற்றையும் கேட்ட ஸத்யகாமன் ப்ரம்ம தேஜஸ்வியாக ஆசாரியனிடம் சென்றுன். ஆசாரியன் தானும் ப்ரம்மோபதேசத்தை செய்து நல்லப்ரம்மஞானியாக ஆக்கினார். ஆகையால் "கோ ஸேவை, கோஸம்ரக்ஷணை" எல்லாவற்றையும் அளிக்கவல்லது.

"கோப்ராமணேப்யோ சுபமஸ்து நித்யம்"



# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. ராஜகோபாலன் - சென்னை.

*ஸுபுஜோ துர்த்தரோ வாக்மீ*
*மஹேந்த்ரோ வஸுதோ வஸு: ।*
*நைகரூபோ ப்ருஹத்ரூப:*
*சிபிவிஷ்ட: ப்ரகாசந: ।। 29 ।।*

**266.** ஸுபுஜ: தன்னை அடைந்தவர்களைக்காப்பதற்கான தோள்வலி உடையவன்

கற்பகக் காவன நற்பல தோளற்கு (6-6-6)

**267.** துர்த்தர: நம்மால் எதில் மனத்தில் தேக்க இயலாதவாறு விளங்குவோன்.

..... எம், பெருமான் தன்மையை யார் அறிகிற்பார், பேசி என்? (8-3-9)

**268.** வாக்மீ: (அவதாரங்களில்) கேட்கக் கேட்க அமுதல் போல் இனியன பேச வல்லவன்.

பழுத்த நல் அமுதின்இன் சாற்று வெள்ளம்...
செங்கனி வாயின் கள்வப் பணிமொழி (10-3-4)

**269.** மஹேந்த்ர: பரம ஐச்வர்யம் வாய்ந்தவன்.

செல்வ நாரணன் (1-10-8)

**270.** வஸுத: விரும்புவோர்க்குச் செல்வம் அளிப்பவன்.

எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-11)

**271.** வஸு: வேறு எதுவும் வேண்டாதார்க்குத் தானே தனமாக இருப்பவன்.

....அவன் என்னுள் இருந்தான் அற வீற்றிருந்தான்
....மூவுலகும் பொருள் அல்ல (8-7-3)
என்னை முற்றுந் தானேயாய் நின்ற
மாயஅம்மான்(10-7-3)

## 9. விச்வ ரூபம்

**272.** நைகரூப: விச்வரூபமாகப் பல உருவங்கள் கொள்பவன்.

ஒன்றெனப், பலவென அறிவரும் வடிவினுள்
நின்ற - நன்றெழில் நாரணன் (1-3-7)

**273.** ப்ருஹத்ரூப: திசைகளிலும் மேலுலகங்களிலும் வியாபித்திருக்கும் பெரிய வடிவம் வாய்ந்தவன்.

கருமாணிக்க மலைபோல் (8-9-1)

**274.** சிபிவிஷ்ட: சூரியன் முதலிய க்ரஹங்களில் புகுந்து படர்ந்திருப்பவன்.

நிகழும் ஆகாசம் என்கோ? நீள்சுடர் இரண்டும் என்கோ? (3-4-1)

[நீள் சுடர்-சூரியன், சந்திரன் இவற்றுள் உறைந்து இவற்றை இயங்கச் செய்பவன்.]

**275.** ப்ரகாசந: தனது திவ்ய ரூபத்தைக் காண விரும்பும் அன்பர்க்கு அதை விளங்கக் காட்டுவோன்.

ஒரு கதியின் சுவை தந்திட்டு, ஒழிவிலன் என்னோடுடனே (1-9-3)

[ஒரு கதியின் சுவை-ஒருவகைப் பட்ட சுவையை என்னோடுடனே ஒழிவிலன்-என்னை விட்டு நீங்க இயலாதவன்.]

*ஓஜஸ் தேஜோ த்யுதிதர:*
*ப்ரகாசாத்மா ப்ரதாபந: ।*
*ரித்த: ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரச்*
*சந்த்ராம்சுர் பாஸ்கரத்யுதி: ।। 30 ।।*

**276.** ஓஜஸ்-தேஜோ-த்யுதிதர: பலம், பராக்ரம், ஒளி இவை உடையவன்.

குன்றம் ஒன்று ஏந்தியதும் (3-10-1) பலம்

நிகரில் மல்லரைச் செற்றதும்.... புகர்

கொள்சோதி (3-10-3) [பராக்ரமம், ஒளி]

**277.** ப்ரகாசாத்மா: -யாவர்க்கும் தன்னைக் காட்டிக்கொள்ளும் இயல்பு வாய்ந்தவன்.

மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காணவந்து (3-10-6)

**278.** ப்ரதாபந: தனது காந்தியால் பகைவர்களைத் தபிக்கச் செய்பவன்.

அரி ஏறே! என் அம்பொற்சுடரே! (5-8-7)

[அரிஏறு-ஆண்சிங்கம், பகைவர்க்கு. சுடர் அன்பர்க்கு.]

**279.** ரித்த: பருவகாலக் கடல்போல் நிறைவுடையவன்.

கடல் வண்ணன் கண்ணன் (3-6-10)

[வண்ணம்-இயல்பு. அளவிடமுடியாமை குறிப்பு]

**280.** ஸ்பஷ்டாக்ஷர: தனது மேன்மையை நன்கு வெளியிடும் வேதங்கள் ( அக்ஷரங்கள்) வாய்ந்தவன்.

நாரணன்....வேதமயன் (2-7-9)

**281.** மந்த்ர: தன்னை மனனஞ் செய்வோரைக் காப்பவன்.

மேலி நின்று தொழுவார் வினைபோக மேவும் பிரான் (4-5-4)

தன்னை நினைந்து எழ, நல்ல அருள்கள் நமக்கே அருள் செய்வான் (8-6-1)

**282.** சந்த்ராம்சு: - தன்னை நினைப்பவர்களது தாபத்தைத் தீர்த்துச் செழிப்பை அளிக்கும் ஒளி, சந்திர ஒளி போல் வாய்ந்தவன்.

(ஒளியைக் குறிப்பது:)

சவிகொள் பொன் முத்தம் என்கோ? (3-4-4)

[சவி-ஒளி, முத்தம்-முத்து.]

**283.** பாஸ்கர த்யுதி: - சூரியன் போல் ஒளிவாய்ந்தவன்.

பரஞ்சுடர் உடம்பாய் (6-3-7)

[சுடர்-சூரியன், உலகில் காண இயலாத சோதி வாய்ந்த திருமேனி உடையவன்.]

அம்ருதாம் சூத்பவோ பாநு:
சசிபிந்து: ஸுரேச்வர: ।
ஔஷதம் ஜகதஸ் ஸேது
ஸத்ய-தர்ம-பராக்ரம: ।। 31 ।।

**284.** அம்ருதாம்சூத்பவ: - சந்திரனுக்குப் பிறப்பிடமானவன், இவனது மனத்திலிருந்து சந்திரன் தோன்றியது குறிப்பு.

**285.** பாநு: - சூரியனுக்கும் ஒளி தருமாறு ஒளி வாய்ந்தவன்.

இருநாயிறு ஆயிரம் மலர்ந்தன்ன...நெடியோய் -(திருவாசிரி- 5)

[இருநாயிறு-பரவும் ஒளியுடைய சூரியன்.]

**286.** சசிபிந்து: - கபட மனமுடையாரை நல்வழியில் திருப்புவோன்.

கடிவார் தீய வினைகள், வடிவார் மாதவனாரே (1-6-10)

[மாதவனார் - தீவினைகள் கடிவார்.]

**287.** ஸுரேச்வர: - நல்ல வழியில் நடப்பவர்களுக்கு நாதன்.

பெருமக்கள் உள்ளவர்தம் பெருமானை (3-7-5)

[பெருமக்கள் - நித்யசூரிகள், பெரியோர் என்றபடி, உள்ளவர்-சேஷத்வம் குறையில்லாதவர்.]

**288.** ஔஷதம்: - பிறவியாகிய நோயைத் தீர்க்கும் மருந்து.

செடியார் வினைகள் தீர்மருந்தே! (6-10-7)

**289.** ஜகத: ஸேது: - உலகில் புண்ணிய பாவங்களுக்கேற்றவாறு, பலன்களை மாறுமல் கொடுப்பவன்.

கடுவினை நஞ்சே! என்னுடை அமுதே! (9-2-10)

**290.** ஸத்ய-தர்ம-பராக்ரம: - தனது கல்யாண குணங்களும், பராக்ரமும், பழுதாகாதவாறு நிலையாகப் பெற்றவன்.

எம் இடர் கடிந்து, இங்கு என்னை ஆள்வானே! (9-2-7)

[இடர் கடிவது-தர்மம், ஆள்வது, பராக்ரமத்தால் விரோதியைப் போக்கிக் காப்பது.]

(தொடரும்)

★★★★★★★★★★★★★

# வேஷதாரி

திரு. லா.ஸ்ரீநிவாஸன் - புதுதில்லி.





வேஷதாரி என்றால் வேஷம் போடுபவன் என்று பொருள். வேஷம் போடுவது இருவகைப்படும். ஒன்று நாடகத்தில் பாத்திரமாக நடிப்பது; மற்றொன்று மனதில் ஒன்றுவைத்துக்கொண்டு வெளியில் கபடமாக வேறுவிதமாக நடப்பது. எம்பெருமான் இவ்விரண்டு விதமாகவும் வேஷதாரியாவான். அதை விவரிப்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

## பிரமன் முதலிய வேஷங்கள்

ஸ்வாமி ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் வரதராஜ பஞ்சாசத்தில் (ச்லோ.9) இங்ஙனே அருள்கிறார்.

समीरयसि प्रलय विभ्रम नाटिकायां
शैलूषवद् विविध वेष परिग्रहं त्वाम् ।
संभावयन्ति हृदयेन करीश धन्याः
संसार वारिनिधि सन्तरणैक पोतम् ।।

**இதன் கருத்தாவது: அத்திகிரிப்பெருமானே! உலகத்தைப் பிரமன் படைப்பதாகவும், நீ காப்பதாகவும், சிவன் அழிப்பதாகவும் நூல்கள் கூறும். உண்மையில் பிரமனுக்கும் சிவனுக்கும் நீ அந்தர்யாமியாயிருந்து அச்செயல்களைச் செய்கிறாய். இந்த முச்செயல்களும் விளையாட்டாக நீ நடத்தும் ஒரு நாடகமேயாகும். அந்த நாடகத்தில் நீயே நடிகன். பிரமன், சிவன் என்ற பல வேஷங்களை நீயே அணிந்து நடிக்கிறாய். மேலும், ஸம்ஸாரமென்னும் கடலைக்கடப்பதற்கு நீ ஒப்பற்ற படகு போல் நின்று** ஸம்ஸாரத்தை ஒழித்து முக்தியளிக்கிறாய். இத்தகைய சிறப்புகளையுடைய உன்னைப் புண்ய சாலிகளான மஹான்கள் தமது உள்ளத்தால் இடைவிடாது சிந்திக்கின்றனர் என்றபடி.

திருவாய்மொழி 5-10-4ன் ஈட்டில் "ப்ரஹ்மருத்ரர்கள் நடுவே நின்றதொரு முதற்கள்வமுண்டு" என்ற ஸ்ரீஸூக்தியும் காண்க.

## நடனும் நடியும்

இதேபோன்று பகவானின் தசாவதாரங்களையும் பல்வேறு வேஷங்களாகச் சித்திரிக்கிறார் ஸ்வாமிதேசிகன். தசாவதார ஸ்தோத்ரத்தில் (ச்லோ.1) எம்பெருமானான நடனுடன் மஹாலக்ஷ்மியான நடியும் எங்கும் உண்டு என்றும் அருள்கிறார்.

देवो नः शुभमातनोतु दशधा निर्वर्तयन् भूमिकां
रङ्गे धामनि लब्ध निर्भर रसैरध्यक्षितो भावुकैः ।
यद्भावेषु पृथग्विधेष्वनुगुणान् भावान् स्वयं बिभ्रती
यद्धर्मैरिह धर्मिणी विहरते नानाकृतिर्नायिका ।।

உலகில் நடிகன் பற்பல வேஷங்களை அணிந்து நாடக மேடைக்கு வந்து நடப்பான். அப்பொழுது நடியும் அவனுடைய வேஷத்துக்கு ஏற்ற வேஷத்தை அணிந்து மேடைக்கு வந்து ஏற்றவாறு நடிப்பாள். இவர்களின் நடிப்பைக் கண்டு ரஸிகர்கள் மனமகிழ்வார்கள்.

'ரங்கம்' என்றால் நாடக மேடை என்று பொருள். ஆக, திருவரங்கமே ஒருநாடக மேடை. அதில் திருவரங்கனும் திருவரங்கநாச்சியாரும் நடிப்பவராவர். திருவரங்கன் என்னும் நடிகன் மத்ஸ்யம், கூர்மம், வராஹம், நரசிங்கம் முதலிய பத்து வேஷங்களை அணிந்து நடிக்கிறான். இது அவனுக்கு ஒரு லீலையாக உள்ளது. திருவரங்கநாச்சியார் என்னும் நடியும் அவனுடைய அவதாரங்களுக்கு ஏற்ற வடிவு கொள்கிறாள். இவன் செய்யும் படைத்தல், காத்தல் முதலிய செயல்களுக்கு ஏற்ற செயல்களை இவளும் புரிந்து துணை செய்கிறாள். இதுவும் இவளுக்குத் திருவிளையாட்டாகின்றது. இவர்களின் வேஷத்தையும் செயலையும் கண்டு ரஸிகர்களான அடியார்கள் மிக்க மகிழ்ச்சி கொள்கின்றனர். இங்ஙனே பிராட்டியைப் பிரியாத திருவரங்கன் நமக்கு நலத்தை அருளவேண்டும் என்றபடி.

## அவதாரத்தில் துக்க அபிநயம்

ஸ்ரீராமவதாரத்தில் எம்பெருமான் உண்மையிலேயே துக்கமடைந்தான் என்று சிலர் நினைப்பர். உண்மைநிலையோ அதுவல்ல என்பதை ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் (ஸித்தோபாய சோதனாதிகாரத்தில்) விளக்கியுள்ளார். व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः (மனிதர்களின் துக்கங்களில் ஸ்ரீராமன் மிகவும் துக்கமுள்ளவனாகிறான்) என்று வால்மீகி சொல்லியிருப்பது, ஸ்ரீராமன் பக்தர்களைச் சந்தோஷிக்கச் செய்யவும், சத்ருக்களை

மயங்கும்படிச் செய்வதற்குமாக நடித்ததேயாகும். இங்கு பாரதம், ஸ்ரீவிஷ்ணுபுராணம் முதலிய பலமேற்கோள் களைக் காட்டி ஸ்வாமிதேசிகன் இங்ஙனே முடிக்கிறார். ஆகையால் அவதார வ்ருத்தாந்தங்களிலும் துக்க அபிநயமாத்ரமே உள்ளது.

### கள்ளவேஷம்

எம்பெருமானின் அவதாரங்களில் புத்தாவதாரமும் ஒன்று. சத்ருக்களை மயக்குவதே இதன் முக்ய நோக்கமாகும். எனவே இதைக் கள்ள வேஷம் என்றார் நம்மாழ்வார்.

**கள்ளவேடத்தைக் கொண்டு போய்**
புறம்புக்கவாறும், கலந்தசுரரை
**உள்ளம் பேதம் செய்திட்டு**
உயிருண்ட உபாயங்களும்
**வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடை**
வேறலாமை விளங்கநின்றதும்
**உள்ளமுள் குடைந்து என்னுயிரை**
உருக்கியுண்ணுமே.
(திருவாய்மொழி 5-10-4)

பரதனின் கோரிக்கைப்படி ராஜ்யத்தை ஏற்கவேண்டுமென்று வாதாடிய ஜாபாலி முனிவர் சில நாஸ்திக வாதங்களைப் பண்ண, அப்போது சக்ரவர்த்தித் திருமகன் அவரைக் கடிந்து यथा हि चोरस्तथा हि बुद्धः । तथागतं नास्तिकमत्र विद्धि ।। (திருடனைப் போல் ஜனங்களின் ஆஸ்திக்யத்தைக் கொள்ளை கொள்வதனால் புத்தன் ஒரு கள்வன், அவனை நாஸ்திகன் என்று தெளிக.) என்றருளினார்.

புத்தமதம் பிறந்தவரலாறு ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் மூன்றும் அம்சத்திலுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு: சில அஸுரர்கள் சிவனைக் குறித்துத் தவம் புரிந்து, ஒருவராலும் வெல்ல முடியாத இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய மூன்றால் செய்யப்பட்ட மூன்று பட்டணங்களையும் வரமாகப்பெற்று, அவற்றிலிருந்து கொண்டு தேவர்களையும், தேவர்களைக் குறித்து வேள்வி புரியும் அந்தணர்களையும் நலிந்து வந்தனர். யாகங்கள் நடைபெறுமையால் ஹவிஸ்ஸு கிடைக்கப்பெறாத தேவர்களின் வலிவு ஒடுங்க, அவர்கள் சிவனிடம் சென்று அந்த அஸுரர்களை ஸம்ஹரிக்க வேண்ட, அவனும் அது தன்னாலாகாது என்றான். பிறகு அனைவரும் திருப்பாற்கடலுக்குச் சென்று பரமபுருஷனைத் துதிக்க, திருமால் அந்த அஸுரர்களைத் தாம் அழிப்பதாக வாக்களித்தார். அவ்வஸுரர்கள் சில தர்மங்களை அனுஷ்டித்து வந்ததால், அவர்களுக்கு அவற்றில் சிரத்தையில்லாமல் செய்ய எண்ணித் திருமால் பரம தார்மிகனான ஒரு கிழவனாக வேஷம் பூண்டு அவர்களிடம் சென்று பலவித குதர்க்க வாதங்களாய் அவர்களுடைய தர்ம சிந்தனையைக் குலைத்து அவர்களை வேத விருத்தமான நாஸ்திகர்களாகும்படிச் செய்தார்.

பிறகு பகவதனுக்ரஹத்தால் சிவன் அந்த மூன்று பட்டணங்களையும் அழித்து த்ரிபுரஸம்ஹாரன் என்ற பெயரை அடைந்தான் विष्णुरात्मा भगवतो भवस्यामिततेजसः । என்கிற ப்ரமாணத்தையொட்டி (மஹாபாரதம், மோக்ஷதர்மம் 196-16) எம்பெருமான் சிவனுக்கு அந்தராத்மாவாயிருந்ததால்தான் அவனுக்கு வெற்றி கிடைத்தது.

ஆக, பாசுரத்தின் கருத்தாவது - வேத பாஹ்யபுத்தரூப வேஷத்தைப் பரிக்ரஹித்து த்ரிபுரத்திலே ப்ரவேசித்தபடியும், அஸுரர்களோடு கலந்து பல குதர்க்கங்களால் அவர்களுக்கு தர்மவிருத்தமான மனப்பான்மையை உண்டாக்கி அவர்களுடைய உயிரைக் கவர்ந்த உபாயங்களும், அந்த த்ரிபுரங்களை வென்ற கங்காதரனான சிவனும் உன்னை அந்தராத்மாவாகக் கொண்டிருந்ததால் உன்னை விட வேறில்லாமல் விளங்கி நின்றதும் என் நெஞ்சத்துக்குள்ளே புகுந்து என் ஆத்மாவை நீராக உருக்கி உண்கின்றன என்றபடி.

### மோஹன சாஸ்திரங்களை இயற்றுதல்

இதையடியொற்றியே ஸ்வாமி தேசிகன் தயா சதகத்தில் (47) இங்ஙனே அருளியுள்ளார்.

विद्वसेवा कतक निकषैर्वीत पङ्काशयानां
पद्माकान्तः प्रणयति दये दर्पणं ते स्वशास्त्रम्।
लीलादक्षां त्वदनवसरे लालयन् विप्रलिप्सां
माया शास्त्राण्यपि दमयित् त्वत्प्रपन्न प्रतीपान्।।

மஹான்களான தத்வஜ்ஞானிகளுடைய ஸேவை (சிச்ருஷை) என்ற தேத்தாங்கொட்டையின் ப்ரபாவத்தால் பாவம் என்னும் சேறு முழுவதும் நீங்கி சுத்தமடைந்த மனதுடையவர்களின் ப்ரயோஜனத்துக்காக தயாதேவியே! உனக்குக் கண்ணாடி போன்ற பகவத் சாஸ்திரத்தை (பாஞ்சராத்ர ஆகமத்தை) ஸ்ரீநிவாஸன் ஏற்படுத்துகிறான். நீ அருகில் இல்லாத ஸமயத்தில் லீலையில் ஸமர்த்தையான ஏமாற்றும் இச்சையை லாலனம் செய்து கொண்டு, உன்னைச் சரணமடைந்தவர்களுக்கு விரோதிகளான ஆஸுர ப்ரக்ருதிகளை ஒழிப்பதற்காக மோஹன சாஸ்திரங்களை இயற்றுகிறான் என்றபடி.

எம்பெருமானுக்கு தயை, லீலை என்று இரண்டு மஹிஷிகள். இருவரையும் ஸந்தோஷப்படுத்த வேண்டும். அதற்காக பகவான் தயை இல்

லாத ஸமயத்தில் லீலையுடன் கூடி வஞ்சனையால் மோஹன மான சாஸ்திரங்களை இயற்றி அவளை ஸந்தோஷிக்கச் செய் கிறான். அதுவும் தயாதேவி யின் அடியார்களின் எதிரிகளை ஏமாற்றவும் அடக்கவுமே உதவு கின்றது என்றபடி.

பாஞ்சராத்ர ஆகமம் திரு வேங்கடமுடையானையும் அவ னது தயையையும் உண்மை யாக உள்ளபடி ப்ரதிபலிக் கும் கண்ணாடியாக உள்ளது. மற்ற கண்ணாடிகளில் (ஆகமங்க ளில்) அவன் முகமும் உருவமும் அறிய முடியாதபடிக் கோண லாக மாறிக் காட்டப்படுகின் றன என்ற கருத்தையும் இங்கு உய்த்து உணர்க.

மேலும்,

त्वंहि रुद्र महाबाहो मोहशास्त्राणि कारय ।
दर्शयित्वाऽल्पमायासं फलं शीघ्र प्रदर्शय ।।

(வராஹ புராணம் 70-36)

"நீண்ட கையையுடைய ருத் ரனே! நீ ஜனங்க ளுக்கு மோஹம் உண்டாகும் படியான சாஸ்திரங்களை இயற்று, அல்பமான சிரமத் தைக் காண்பித்து அதனால் சீக் ரமான பலன் கிடைக்குமென்று காட்டு" என்கிறபடியே, ருத்ர னையும் மோஹன சாஸ்திரங் களை ப்ரவர்த்திக்கச் செய்கி ருன் பகவான்.

## கபட வாமனன்

வாமனனையும் கபட வேஷ மாக ஸ்வாமிதேசிகன் இங்ஙனே வர்ணிக்கிறார்.

क्रामन् जगत् कपटवामनतामुपेतः
त्रेधा करीश स भवान् निदधे पदानि ।
अद्यापिजन्तव इमे विमलेन यस्य
पादोदकेन विधृतेन शिवा भवन्ति ।।

(வரதராஜ பஞ்சாசத்24)

அத்திகிரிப் பெருமானே! மிக்க பெருமையுடைய நீ கப டமானவாமனத் திருமேனியை அடைந்தவனாய், உலகத்தை அளப்பதற்காகத் திருவடிகளை மூவகையாக வைத்தாய். உன் திருவடியின் பரிசுத்தமான தீர்த் தத்தை சிவன் தனது தலையி னால் தாங்கினான் அன்றோ? அங்ஙனேயே அந்த தீர்த்தமாகிய கங்கை நீரைத் தலையில் தரிப்ப வர்கள் இப்போதும் சிவர்களாக (மங்களமானவர்களாக) ஆகின்ற னர் என்றபடி.

பகவான் வாமனனாக அவ தரித்து மாவலியை வஞ்சித்த வரலாற்றை ஆழ்வார்கள் பாசு ரங்களிலும் காணலாம். "மின் கொள் சேர் புரிநூல் குறள் ஞாலம் கொண்டவன் கள்வன்" (திருவாய்மொழி 6-1-11) என்ற ருளினார் நம்மாழ்வார்.

"கொள்வன் நான் மாவலீ! மீவடிதாவென்ற கள்வனே!" என் றூர் மேலும். (திருவாய் மொழி 3-8-9) இந்த வாம னன் தேவகார்யம் செய்ய வந் தவன் என்று சுக்ராச்சாரியார் தானத்தை மறுக்கும்படிச் சொல் லியும், அது மாவலியின் நெஞ் சில் படாதபடி தனது வடிவ ழகாலும் பேச்சாலும் அவனை வஞ்சித்த கள்வன் வாமனன் என்றபடி.

## கள்வனின் வேஷம்

கள்வர்களின் தலைவனான தனது பக்தனின் வேஷத்தை அணிந்து அரசனிடம் சென்று வாதாடி தன் பக்தனைக் காப்பாற்றியதனால் பாண்டிய நாட்டு ஸ்ரீவைகுண்டம் என்ற திவ்ய தேசத்திலுள்ள எம்பெரு மானுக்குக் கள்ளப்பிரான் என்று திருநாமம் ஏற்பட்டது என்று ப்ரஹ்மாண்ட புராணம் கூறும்.

## வேஷத்துடன் வரவழைத்தல்

ஒரு அந்தணனுக்கு முறையே பிறந்த மூன்று பிள்ளைகள் பிறந்த அப்பொழுதே, பெற்றவ ளும் கூட முகத்தில் விழிக்கப் பெருதபடி, இன்னவிடத்திலே போயிற்றென்று தெரியாமல் காணவொண்ணுது போய்விடு கையால், நான்காம்பிள்ளையை தன் மனைவி ப்ரஸவிக்க இருக்கும்போது அந்த அந்த ணன் கண்ணபிரானிடம் வந்து 'இந்த ஒரு குழந்தையையாவது தேவரீர் பாதுகாத்துத் தந்தரு ளவேண்டும்' என்று ப்ரார்த்தித் தான். கண்ணபிரானும் அப் படியே செய்வதாக வாக்களித் தான்.

ஆனால் அப்போது கண் ணபிரான் ஒரு யாகத்தில் தீக்ஷிதனாயிருந்தபடியால் அதை விட்டுச் செல்லமுடியவில்லை. அப்போது அர்ஜுனன் தான் போய் ரக்ஷிப்பதாக ப்ரிதிஜ்ஞை செய்து, பிராஹ்மணனுடன் சென்று ப்ரஸவ க்ருஹத்தைச் சுற்றியும் காற்றுக்கூட ப்ரவே சிக்க முடியாதபடி சரக்கூ டம் கட்டிக் காத்துக்கொண்டு நின்றான். ஆனால் பிறந்தபிள் ளையோ வழக்கப்படியே பிறந்த வுடனேயே காணுமற்போயிற்று.

அதனால் மிக்க சோகம டைந்த ப்ராஹ்மணன் அர்ஜு னனை நிந்தித்து கண்ணனிடம் வந்து முறையிட்டான். கண் ணபிரான் அதுகண்டு புன்சிரிப் புகொண்டு 'உன் பிள்ளையை நான் கொண்டுவந்து கொடுக் கிறேன்' என்று அருளிச்செய்து, ப்ராஹ்ணனையும் அர்ஜுனனை யும் தன்னுடன் கொண்டு தேரேறி, அர்ஜுனனைத் தேர் செலுத்தச் சொல்லி, அத்தேருக் கும் இவர்களுக்கும் திவ்ய சக் தியைக் கொடுத்து, இவ்வண்

டத்துக்கு வெளியே வெகுதூரம் கொண்டுபோய், அங்கு ஓரிடத்தில் தேருடனே இவர்களை நிறுத்தி, தன்னிலமான தேஜோமயமான பரமபதத்தில் தானே போய் புக்கு, அங்கிருந்த வைதிகளின் நான்கு பிள்ளைகளையும் அங்கு நின்றும் முன் உருவத்தில் ஒரு குறையுமின்றிக் கொண்டு வந்து கொடுத்தான். இத்தனையையும் யாகத்திற்கு ஒரு தடங்கலும் வராமல், காலை ஸவநம் முடிந்து மாலை ஸவநம் தொடங்குவதற்குள் நடத்தி வைத்தான் எம்பெருமான்.

அக்குழந்தைகளைப் பரமபதத்தில் யார்கொண்டு சேர்த்தனர்? ஏன்? என்ற கேள்வி எழுகிறது. இதற்கு விடை ஸ்ரீவைகுண்டத்திலுள்ள ஸ்ரீ, பூமிநாச்சிமார்கள் பூலோகத்திலுள்ள பகவான் கண்ணபிரானின் வேஷத்தில் எங்ஙனே உளன் என்பதைக் கண்டு களிக்க விரும்பினர். அதற்காகக் கண்ணபிரானை அதே வேஷத்துடன் பரமபதத்திற்கு வரவழைத்துக் காணவழிசெய்தனர். பிராட்டிமார்களுக்குள்ள ஸ்வாதந்தர்யம் என்ற சலுகையை இதற்காக உபயோகப்படுத்தினர்.

இது எதுபோன்றதெனில், ஒருநடிகனின் மனைவிக்குத் தனது கணவனை நாடகத்தில் பார்க்க ஸந்தர்ப்பமே கிடைக்காமல் இருந்ததாம். கடைசியில் நாடக வேஷத்திலேயே அவனைக் காண்பதற்காக ஓர் உபாயம் செய்தாள். 'வீட்டில் ஏதோ பெரிய ஆபத்து, உடனே நாடகத்திலிருந்து வந்து சேர வேண்டியது' என்று சொல்லியனுப்பினாள். அவனும் என்ன ஆபத்தோ என்று பதறி, இருந்த வேஷத்துடனே அப்படியே வீட்டுக்கு ஓடி வந்தானாம். அதைக் கண்டு அவன் மனைவி மகிழ்ந்தாள் என்பர்.

வைதிகனின் பிள்ளைகளை மீட்ட இந்த வருந்தாந்தத்தை நம்மாழ்வார் இங்ஙனே அநுபவிக்கிறார்.

கலக்க ஏழ்கடல் ஏழ் மலை
உலகேழும் கழியக் கடாய்
உலக்கத்தேர் கொடுசென்ற மாயமும்
உட்பட மற்றும் பல
வலக்கையாழி இடக்கைசங்கம்
இவையுடையமால்வண்ணனை
மலக்குநாவுடையேற்கு மாறுளதோ
இம்மண்ணின் மிசையே?
(திருவாய்மொழி 6-4-9)

ஏழு கடல்களும் ஏழுமலைகளும் ஏழுலுலகங்களும் கலங்கும்படியாக அண்ட கடாஹத்துக்கு அப்பால் போம்படியாக நடத்தி தேரைக் கொண்டு முடியச்சென்ற ஆச்சரியமும், இதுமுதல் மற்றும் பல சேஷ்டிதங்களையும் பேசி, இரு திருக்கைகளிலும் திருவாழி திருச்சங்கையுடையவனாய், நீல வண்ணனை எம்பெருமானை ஸ்வாதீனப்படுத்திக்கொள்ளும்படியான நாவீறு படைத்த எனக்கு இவ்வுலகின்கண் எதிருண்டோ? என்று ஸாத்விக அஹங்காரத்துடன் ஸாதித்தபடி.

பெரியாழ்வாரும் இந்த அருஞ்செயலை

தப்பின பிள்ளைகளைத் தனமிகு
சோதி புகத்
தனியொரு தேர்கடவித் தாயொடு
கூட்டிய என் அப்ப!"
(பெரியாழ்வார் திருமொழி 1-5-7)

என்றும்,

"பிறப்பகத்தே மாண் டொழிந்த
பிள்ளைகள் நால்வரையும்
இறைப்பொழுதில் கொணர்ந்து
கொடுத்த ஒருப்படுத்த உரைப்பனூர்"
(பெரியாழ்வார் திருமொழி 4-8-2)

என்றும் அருளினார்.

## பரத்வத்தை மறைக்கும் வேஷம்

அவதாரங்களில் எம்பெருமான் தனது பரத்வத்தை மறைத்து மனுஷ்யன் போல் நடிப்பது ராமக்ருஷ்ணாதி அவதாரங்களில் ப்ரஸித்தம். ராவண வதத்தின் பிறகு தேவதைகள் சக்ரவர்த்தித் திருமகனைப் பரம்பொருள் என்று துதிக்க, ஸ்ரீராமன் आत्मानं मानुषं मन्ये रामं दशरथात्मजम् 'என்னை நான் தசரதனின் புத்திரனான மானிடன் ராமன் என்றே எண்ணுகிறேன்' என்று விடையளித்தான். ஏழு நாட்கள் விடாமல் கோவர்த்தனமலையைக் கையிலேந்திய கண்ணனை ஆயர்கள், 'நீ உண்மையில் யார்? தேவனா' என்றெல்லாம் வினவ, கண்ணபிரானும் अहं वो बान्धवो जातः। 'நான் உங்கள் உறவினனாகப் பிறந்த மனுஷ்யன். என்னை வேறு விதமாக எண்ணாதீர்கள்' என்றான்.

இங்கு நம்மாழ்வார்கள் அருளிய ஒரு பாசுரத்தை அநுபவிக்க ப்ராப்தமாகிறது.

கள்வா! எம்மையும் ஏழுலகும், நின்
னுள்ளே தோற்றியசிறைவா! என்று
வெள்ளேறன் நான்முகன் இந்திரன்
வானவர்
புள்ளூர்திகழல் பணிந்தேத்துவரே.
(திருவாய்மொழி 2-2-10)

"உன் ஈச்வரத்வத்தை மறைத்துக்கொண்டு எங்களுக்குத் தெரியாதபடி வந்து நின்ற கள்வனே! எங்களையும் எங்களுக்கிடமான லோகங்களையும் ஸங்கல்ப மாத்ரத்தாலே தோற்றுவித்த ஸ்வாமியே!" என்றிங்ஙனம் துதிக்கின்றார்களாம், கருட வாஹனனான

பெருமானைச் சிவன், பிரமன், இந்திரன் முதலானோர்.

பிறர் அறியாதபடி காரியஞ்செய்பவனைக் கள்வனென்பது. எம்பெருமானும் மறைந்திருந்தே நமது ஸத்தை முதலாக நோக்கிக்கொண்டு போவதானால் கள்வன் எனப்படுகிறான். மேலும் பிறர்பொருளைக் கவர்வது போலவே, தனது தன்மையை மறைத்துக்கொண்டிருப்பதும் கள்வமாகையால், அதையிட்டு 'கள்வா!' என்றது.

தேவர்கள் எம்பெருமான் பக்கலிலே வந்து வரம் கொள்ளும்போது, 'நீர் எங்களிடத்திலே வந்து வரங்கேட்டதாகவும்காட்டி எங்களைப் பெருமைப்படுத்தவேணும்' என்று வரம் கேட்பார்களாம். எம்பெருமான் அதற்கு இணங்கி, 'ருக்மிணிப்பிராட்டிக்கு ஒரு பிள்ளை வேணும்' என்று சிவபிரானிடத்தே வரம் கேட்பனாம்! அப்போது, 'அந்தோ! தான் பராத்பரனாயிருக்கிற நிலைமையை மறைத்துக் கொண்டு இப்படி வரன் கேட்கிறானே! இது என்ன கள்வமோ!' என்று ஈடுபடுவர்களாம். 'கள்வா' என்ற பாசுர விளி அதைக் காட்டுகிறது என்க.

எம்பெருமான் தாழ நின்றதும் ஸ்தோத்ரம் பண்ணி வரன் கேட்டதும் களவு என்பதை 'எம்மையுமேழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவ! என்ற சொற்றொடர் நிரூபிக்கிறது.

## தாய் வேஷமும் குழந்தை வேஷமும்

தீய புத்திக் கஞ்சனின் ஏவல்படி குழந்தை கண்ணனைக் கொல்ல வந்த பூதனை, மிக்க வஞ்சனையால் தாயான யசோதை போலவே வேஷமணிந்து, அவளைப்போலவே மிகவும் பரிவு காட்டிக் குழந்தையை வாரியெடுத்து, அதற்குத் தனது நஞ்சுதீற்றிய முலையைக் கொடுத்தாள். அவளுடைய இந்த வேஷத்தை ஆழ்வார்கள் பல இடங்களில் பாடியுள்ளனர். உதாஹரணமாக,

பெற்றதாய்போல் வந்த பேய்ச்சி
பெருமுலையூடு, உயிரை
வற்றவாங்கியுண்டவாயான்
(பெரிய திருமொழி 1-3-1)

அவள் இங்ஙனே உண்மைத் தாய் போல் வேஷம் போட்டால், கண்ணபிரானும் அவளை நிஜமான தனது தாய் என்று நம்பிய குழந்தைபோலவே வேஷம் போட்டு அவளுயிரையுண்டான். இதைப் பூதத்தாழ்வார் இங்ஙனே அருளினார்.

மகனாகக் கொண்டெடுத்தாள்
மாண் பாயகொங்கை
அகனாரவுண்பனென்றுண்டு
-மகனைத்தாய்
தேறுதவண்ணம் திருத்தினாய்
(இரண்டாம் திருவந்தாதி29)

இதன் கருத்தாவது - நஞ்சு தீற்றிய முலையைக்கொடுத்து உன்னைக் கொல்லவந்த பூதனை என்ற பேய்ச்சியானவள் மெய்யே தாய் போல் வந்து பரிவு காட்டி உன்னை வாரி எடுத்துக்கொண்டு முலை கொடுத்தாள். நீயும் அவளைத் தாய் என்று நம்பும் மெய்யே குழந்தையாகவே பாவனை காட்டி அம்முலையைச் சுவைத்துண்பவன் போல் அவள் உயிரையே உறிஞ்சி உண்டாய். அது முதலாக உன் மெய்த்தாயான யசோதைப் பிராட்டிக்கு உன்னிடம் நம்பிக்கை உண்டாக இடமில்லாமல் போயிற்று. 'இவனை நாம் சிறு குழந்தை என்று நம்பவே கூடாது' என்று எப்போதும் துணுக்குத் துணுக்கென்று அவள் அஞ்சியிருக்கும் வண்ணம் செய்துவிட்டாய் என்றபடி.

## நமது வாழ்க்கையில் வேஷம்

ஒருவன் கடுமையான வியாதியால் பீடிக்கப்பட்டுள்ளான். அவன் வைத்யனிடம் தன் நிலைமையைப் பற்றிப் பரிதாபமாக வினவுகிறான். வைத்யன் 'உனக்கு அதிக நாள் மிகுதியில்லை' என்று அவனுக்கு உண்மையை நேரே தெரிவிக்கக்கூடாது. 'சீக்கிரம் குணமாகிவிடுவாய், கவலைப்படாதே' என்று அவனைத் தேற்ற வேண்டும்.

அங்ஙனேயே, ஜோஸ்யனும வரப்போகிற மரணம் போன்ற பெரிய கெடுதலை நேருக்கு நேர் தெரிவிக்கக்கூடாது என்று சாஸ்திரமே விதிக்கிறது. இங்ஙனே உண்மையை மறைத்து வேஷம் போட வேண்டிய சூழ்நிலைகள் தினமும் வாழ்க்கையில் ஏற்படுவதாக காண்கிறோம்.

பிறரைப் பற்றி தான் நினைப்பதை ஒருவன் உண்மையாகவே கூறினானேயாகில், அவனுக்கு நண்பர்களென்றும் உறவினரென்றும் உலகில் ஒருவருமில்லாமல் போயிவிடும். உண்மை என்பது யாது என்பதை விசாரித்த ரிஷிகள் सत्यं भूतहितं प्रोक्तम् மற்றவர்களுக்கு நன்மை பயக்கும் பேச்சே உண்மை என்றும், न ब्रूयात् सत्यमप्रियम् உண்மையாயிருந்தாலும் பிறருக்கு அப்ரியத்தை விளைவிக்கும் வார்த்தையை சொல்லக்கூடாது என்றும் அறுதியிட்டனர்.

இங்ஙனே, வேஷதாரியான எம்பெருமானை அநுஸரித்தும் அநுகரித்தும் நமக்கும் வேஷதாரிகளாக இருக்கவேண்டிய நிர்பந்தங்கள் பல உள என்று சுருங்கக்கூறி முடிப்போமாக.



# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## சீ

சீக்கை - விலக்குகை; சீவுகை

சீதக்கடல் - ஆழமாகையாலே குளிர்ச்சி மாறுத கடல்

சீதன் - சீத ஸ்வபாவன்; தாபம் எல்லாம் தீரும்படியாயிருக்கிற வன்

சீதன அடிமை - ஸ்ரீதனமாக வந்த அடிமை யாள்

சீதன வெள்ளாட்டி - பெண்ணுக்குக் கல்யாண சமயத்தில் பிறந்தகத்தில் கொடுக்கும் சீர் வரிசை சீதனம்

சீத்த - பருத்த

சீத்தர் - அசடர்

சீத்திகை - இளப்பம்; கழிகை

சீதகன் - சுக்கிரன்; சந்திரன்; சோம்பல் உடையவன்

சீதை - ஸீதா என்ற வடசொல்லின் திரிபு சீதையாகும்; உழும்படைச் சால்

சீதை மணாளன் - இராமன்

சீமாலிகன் - மாலிகன் என்னும் பெயரையுடைய அசுரத்தலைவன். சீ என்பது உபசார வழக்குச் சொல். ஸ்ரீஎன்னுமது சீ என்ருகி கண்ணனோடு நட்புக் கொண்டதால் வந்த சீர்மையைச் சொல்லுகிறது என்பர்.

சீமை - நிலப்பரப்பு; அந்தப்புரத்துக்காக விட்ட சீமை. ஸீமா - எல்லை நிலம். ஸிமா சீமையாகி நிலப்பரப்பைச் சொல்லுகிறது.

சீய்க்கை - தீய்க்கை; திருவலகிடுகை அதாவது வாருகோல் எடுத்து குப்பையைக்கூட்டி சுத்தம் செய்வது.

சீயம் - சிங்கம்

சீர் - குணம்; அழகு; செய்யுள் உறுப்பு; நன்மை, புகழ்; ஓசை

சீயர் - வைணவ சந்நியாசிகளுக்குப் பேர். சீயம் (சிங்கம்) சீயராகி ஜீயர் என்று வடமொழி ஜகாரமிட்டு வழங்கப் படுகிறது. சீயர் என்பது தான் தமிழ்மொழி. நஞ்சீயர் என்பது காண்க. நஞ்ஜீயர் என்று எழுதுவது பிழை. சீயா, ஜீயா என்று ஆன்றோர் அழைப்பர்.

சீர்க்க - கனக்க; பெருக்க

சீர்க்கை - சீரான கை, திருக்கை

சீர்கலந்த சொல் - வடிவழகுக்கும் குணங்களுக்கும் வாசகமான பசுங்கூட்டான சொல்

சீர்கெழுகோதை - கல்யாண குணங்களால் குறைவற்றிருக்குமவள்

சீர்த்தமுலை - விரலாலிட்டுச் சுற்றி பிடிக்க முடியாமல் இரு கைகளாலும் அணைத்துக் கறக்க வேண்டும்படி பருத்தமுலை; காம்பு

சீர்பெற - நிறமாம்படியாக

சீர்மை - பெருமை; ஸ்வபாவம்; சீலம், வாசி

சீர்மலிசெந்தமிழ் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம், சீர், தாளம் - என்ற லக்ஷணங்களுக்கு இருப்பிடமான தமிழ். 'செந்தமிழாவது நேர்மையாயன தமிழ், அதாவது நடைவிளங்கு தமிழ்' சொல்லுடைய விளக்கத்தாலே உள்ளில் கிடக்கிற பொருள்தானே பிரகாசிக்கும் படி இருக்கை.

சீர்முடி - செல்வத்தைக் குறிப்பதான திருவபிஷேகம், கிரீடம்.

சீரணங்கமார் - நித்ய சூரிகள், சீர்மையுடையராய் அணங்கான நித்ய சூரிகள், சீரணங்கு-ஸ்ரீயான பெரிய பிராட்டி.

சீரணன் - குணங்களையுடையவன்

சீராம விண்ண- சீர்காழி என்னும் திவ்யதேசம்

கர்

சீரார்கலை - வஸ்திரம்

சீரார் சுளகு - சுளகுக்குச் சீர்மையானது பதராறுத்து மணியும் மணி யாக்குமது.

சீரிய சிங்கம் - உறக்கத் திலும் கொடிய மிருகங்கள் மடியும்படி வீரஸ்ரீயையுடைய சிங்கம்

சீரிய சிங்காதனம் - நினைத்த காரியத்தை முடித் துக் கொடுக்கும் சீர்மையு டைய ஆசனம்

சீரியது - நன்றாயிருப்பது

சீருளியம் - தாம்பிரம்

சீலம் - ஸ்வபாவம்; நல்லொழுக்கம், அறப்பெரியவன் அறத்தாழ்ந் தவனோடு புரையறக் கலக் கும் தன்மை

சீலிக்கை - பரிசயம்

சீலைக்குதம்பை - துணியைச் சுருட்டின திரி

சீவித்தல் - செல்வம் உண்டாதல்; ஜீவ னம்

சீவை - நாடகம்

சீழ்கிச்சீழ்கி - விக்கி விக்கி

சீற்றத்தோடு அருள் பெற்றவன் - பிரகலாதன்; இரணியன் திறத்து சீற்றமும் தன் திறத்து அருளும் பெற்ற பிர கலாதன்

சீறுவெரியும் - சீறி இரை பெறுதே பிரகாசிக் கும்

சீறுகின்றது - நலிகின்றது

சீறுபாறு - போட்டியிடுதல்

## சு

சுக்கான் பரல் - சுக்கான்கல், சுக்கான் பருக்கை

சுக்கிடத்திடருண்டோ ஒரு செட்டி ஓடக்காரனுக்குக் காசு கொடுக்க மறுத்து ஆற் றில் இறங்கிப்போன செட்டி நடு ஆற்றில் ஆழத்தில் அகப் பட்டு, ஒரு சுக்குக்கொடுக்கி றேன், திட்டுத்திடர் ஏதாவது காட்டுங்கோள். அதில் ஏறிப் பிழைக்கிறேன் என்று சொன் னானாம்.

சுக்கை - புஷ்பமாலை; வான்மீன்

சுகிர்ந்து - வகிர்ந்து

சுட்டி - தலையலங்காரம்; காரணமாக

சுட்டிட்டு - கொளுத்தி

சுட்டுரைத்தநன் பொன் - உருக்கி ஓடவைத்த நல்ல பொன்

சுடர்கற்றை - ஒளிப்பிழம்பு

சுடர்க்கறை - மின்மினி, மயில்

சுடர்ச்சுட்டி - சுடரையுடைய ஆதித்யனா கிற திலகம்

சுடர் ஞானம் - மழுங்காத ஞானம்

சுடரிருவிசும்பு - புகரையுடைய பெருவிசும்பு, ஆகாசம், அதுக்குச் சுடரா வது மற்ற நான்கு பூதங்க ளான நிலம், நீர், தீ, காற்று - இவைகளுக்கு முன்னே உண்டாகையாலும் அழியும் போது அவை அழிந்தாலும் ஆகாசம் சிறிது காலம் நின்று அழியுமதாகையாலும் வந்த புகரைச் சொல்லுகிறது.

சுடலை - மயானம்; சுடுகாடு

சுண்ணம் - பொடி

சுணங்கையெறிதல் - மயிர்கோள் எறிதல்; கூடி யிருந்து கைதட்டு தல், சுணம்-சூர்ணம், மஞ்சள் பொடி அதைக்கையாலே எறி தல் துணங்கைக்கூத்து என் றும் சொல்லுவர்.

சுண்டாயம் - லீலை, விளையாட்டுகள், தன் னலச்செயல்

சுணைக்கேடன் - வெட்கம் இல்லாதவன்

சுணையுடைமை- அபிமானம்

சுதை - வெண்மை, அமுதம்; மகள்; சாந்து

சுந்தரர் - தேவஜாதியில் ஒரு பேதம், கந் தர்வர்

சும்மாடு - தலையில் சுமை அழுந்தா மைக்காக வைக்கும் துணிச் சுருள்

சும்மெனாதே - மூச்சுவிடாதே

சுரர் - பிரமன் முதலான தேவர்கள்

சுரர்குரு - குரு; இந்திரன்

சுரவன்பாக்கு - உயர்ந்த பாக்கு

சுரவி - தேவலோகத்து பசு; காம தேனு சுரபி-பால்பசு

சுரிகுழல் - சுருண்ட கூந்தலையுடையவள்

சுரிகை - கத்தி; உடைவாள்

சுரிமுகம் - சங்கு

சுருக்குண்டு - கட்டுண்டு

சுருங்கலது - சுருங்குகிறதில்லை

சுருங்குறி - கள்ளக்கயிறு வைத்து சுருங் கப்பண்ணின உறி
சுருணை - ஓலை
சுருதி - வேதம்
சுரும்பு - வண்டுகளில் ஒருவகை
சுருள் பங்கி - சுருண்டகுழல்
சுலவுதல் - சுழற்றுதல்; சுற்றுதல்
சுலாய் நெருங்க- நெருங்கச்சுற்றி
சுலோகி - கள்
சுவடு - அடையாளம்
சுவறிப்போதல் - வறண்டுபோதல்
சுவைக்கட்டி - வெல்லக்கட்டி; கருப்புக்கட்டி
சுழலை - வலை; கொள்கலம்
சுழிபட்டோடும் - சுழித்துஓடும்
சுழிமுலை - கோபத்தையுடைய முலை. பூதனைக்கு உண்டான கோபம் அவள் முலைக்கு உண்டு என்பர்
சுழியாறு - சுழியிலே ஆழ்த்துகிற ஆறு ஆழ்த்துகை-அழுத்துகை
சுள்ளி - இள விறகு, குச்சி
சுளகு - முறம்
சுறவம் - சுறுமீன்
சுற்றல் - எண்ணுவது
சுற்றியும் ஆழ்ந்தும் - போயும் வந்தும்

## சூ

சூட்டலாகும் - சூட்டலாம்
சூட்டாயநேமியான் - சூட்டுதல்-அழகுபடுத்தல். சூடு ஆய் சூடத்தகுந்த சக்கரத்தை உடையவன்
சூக்கை - முடிக்கை; ஆணையிடுகை
சூகை - யானை; சிற்றெறும்பு
சூட்டு - நெற்றி, முகப்பு, மாலை, நெற்றியணி
சூடகம் - கைவளை, காப்பு, முன்கை சரி
சூடி - அலங்கரித்து, நுகர்ந்து
சூடிக்கொடுத்தவள் - பூமாலையை முதலில் தான் சூடி பின்பு அழகிய மணவாளனுக்கு சமர்ப்பித்தவள் ஆண்டாள்.
சூதகம் - மாமரம்; ஒட்டுமாமரம்
சூதம் - மாமரம்; வண்டு பிறப்பு
சூதன் - நல்லவர்களை மோசம் செய்து தன் வயமாக்குமவன்; தேர்ப்பாகன்
சூது - தாமரை; சூரியகாந்தி; சூதாட்டம்
சூர் - தெய்வப்பெண்
சூர்ப்பணகா - சூர்ப்பம்-முறம் போன்ற நகத்தையுடையவள். இராவணனின் தங்கை
சூர்ப்பம் - முறம்
சூர்மகள் - வஞ்சப்பெண்
சூர்மையிலாய பேய் - கொடிய வடிவுடைய பூதனை
சூருருவின் பேய்- தெய்வநங்கையான யசோதை வடிவுகொண்டு வந்த பூதனை
சூல் - கர்ப்பம்
சூலப்பெண் / சூல் பெண் / பெண்டாட்டி - கர்ப்பிணியான பெண்
சூழ்கடம் - பரந்த பாலை நிலம்
சூழ்கதவம் - சுற்றுமுண்டான கதவு
சூழ்ச்சி - விசாரம்; துக்கம்; விரகு; ஆவரணம்
சூழ்தல் - ஆராய்தல்; எண்ணுதல்
சூழ்கின்றிலர் - உபாயம் பண்ணுகின்றிலர்; திரளுகின்றிலர்
சூழ்கழல் - ஆபரணங்கள் சூழ்ந்த திருவடி
சூழல் - மணற்குன்று; அவதாரம்
சூழ்ச்சி ஞானம் - எல்லா சேதனர்களையும் சூழ்த்துக்கொள்ள வல்லதான மிகவும் உயர்ந்த ஞானம்
சூழ்த்துக் கொடுத்தல் - ஆணையிட்டுக் கொடுத்தல்
சூழ் போகி வளைத் தெறிந்து - சூழ்ச்சியாவது விசாரம்; போகி-போய், வளைத்து-சளைப்பித்து எறிந்து-கொன்று, திருச்சக்கரத்தாலே அறுத்துப்பொகட்டமையைச் சொல்லுகிறது.
சூழடுபடை - எல்லாப்பக்கத்திலும் சூழ்ந்து கொல்லவந்த சேனை
சூழரவம் - பரந்த திருவனந்தாழ்வான்
சூழிகை - கள்
சூளி - உச்சி
சூளுறவு - ஆணையிடுகை
சூறை கொள்கை - கொள்ளையிடுகை. சூறையாடினான் என்று சொல்லுவர். தேங்காயை சூறையாக உடைத்தல்-உருத்தெரியாது தூளாம்படி உடைத்தல்
சூன்றல் - தோண்டல்
சூன்முகமார் வளை - சூல்முகம்-கர்ப்பநிலை. ஆர்ந்திருக்கிற-நிறைந்திருக்கிற வளை- சங்கு. கர்ப்பநிலையிலுள்ள சங்குப்பூச்சி.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

பத்தாம் . அத்தியாயம்

உமைப்ரியன்

## விபூதி யோகம்

பகவான் கூறுவது:

**உச்சை: ச்ரவஸமச்வானாம் வித்தி**
**மாமம்ருதோத்பவம்।**
**ஐராவதம் கஜேந்த்ராணும்**
**நராணும் ச நராதிபம்।।(27)**

**"குதிரைகளுள் அமுதத்துடன் தோன்றிய உச்சைசிரவஸ்ஸாக வும், யானைகளுள் ஐராவத மாகவும், மக்களுள் அரசனாக வும் நான் விளங்குவதை அறி வாயாக."**

[அமுதத்திற்காகப் பாற்க டலை தேவர்களும், அசுரக ளும் கடைந்தார்கள். அப் போது வாழ்க்கைக்குத் தேவை யான பல பொருள்களும் தோன் றின. அவ்வாறு தோன்றி யவற்றுள் இந்திரன் பெற் றுக்கொண்டது உச்சைசிரவஸ் என்ற அழகுபொருந்திய குதிரை யும், ஐராவதம் எனும் வெள்ளை யானையுமாகும். மக்களைக் காக்கும் தலைவனே அரசனா வான். அதாவது அவன் காக் கும் கடவுளான விஷ்ணுவாக விளங்குபவன்.]



ஆயுதானாமஹம் வஜ்ரம்
தேனூனாமஸ்மி காமதுக் ।
ப்ரஜனஸ்சாஸ்மி கந்தர்ப:
ஸர்ப்பாணுமஸ்மி வாஸுகி: ।।(28)

"போர்க்கருவிகளில் வஜ்ராயுத மாகவும், பசுக்களில் காமதேனு வாகவும், பிறப்புக்குக் காரண மான மன்மதனாகவும், பாம்புக ளில் (ஒரு தலை) வாசுகியாகவும் நான் விளங்குகிறேன்."

[பகவானின் திவ்யாயுதங்கள் சக்கரமும், சங்கும் ஆகும். ஆனால் இறைவன் அவற் றைத் தனது கருவியாகளா கக் குறிப்பிடாமல், வஜ்ராயுதத் தைத் தனது ஆயுதமாகக் கூறு கிறுன். ஏனென்னில், சங்கும் சக் கரமும் இறையம்சங்களாகக் கரு தப்படுகின்றன. அவை யாரா லும் உருவாக்கப்படவில்லை. ஆனால், உருவாக்கிய ஆயுத மாக வஜ்ராயுதம் விளங்குகிறது. மேலும் வஜ்ராயுதம் எனும் கருவி அரக்கனை அழிக்க ததீசி எனும் முனிவரது எலும்பினால் உருவாக்கப்பட்டது. அம்முனி வர் சிறந்த தவம், சீலம், இறை யருள் மூன்றும் பெற்ற மாமு னிவராவர். அதனால் அவர் தம் தேகத்தினின்று உருவாக்கப் பட்ட (எலும்பினால்) ஆயுதமா னதால் அது அதிக வலிமையும், ஆற்றலும், பெருமையும் கொண் டதாக விளங்குகிறது. மேலும் உலகில் தீவினை அழிக்க, தன் னையே அழித்து அதற்கு உத வினார் அம்முனிவர். ஆகவே இவ்வாயுதம் ஒழுக்கத்தின் சிறப் பினையும், தியாகத்தின் பெரு மையினையும் விளக்கிக்கூறும். பசுவின் இயல்பு தன் ரத்தத் தையே பிறர்க்கு உணவா

கக் கொடுக்கின்றது. அத்தகு பசு இனத்தில் வாரி வழங்கும் இயல்பும் ஆற்றலும் கொண்ட காமதேனுவாக தான் இருப்பதாக இறைவன் கூறுகின்றான். காதலின் இருப்பிடமாக மன்மதன் திகழ்கின்றான். அக்காதல் தான் உலகத்தின் இனப்பெருக்கத்திற்கு அடிப்படை உணர்வாக அமைகின்றது. இந்த இச்சா சக்தியின் உறைவிடமாக மன்மதன் திகழ்வதால், தான் அம்மன்மதனாக இறைவன் திகழ்கின்றான். பாம்பு ஏதோ ஒருவகையில் இறையம்சமங்களோடு தொடர்பு கொண்டுள்ளதை கடவுளர்தம் உருவமைதிகளின் மூலம் அறிய.. லாம். மனித சக்தியும் 'குண்டலினி' எனும் பாம்பு வடிவில் உள்ளதாகக் கூறப்படுகிறது. ஆகையால் ஆற்றலும் தெய்வச்சின்னமாகவும் கருதப்படும் பாம்புக்கு முக்கியத்துவம் தரும் வகையில் விஷமுடைய ஒற்றைத்தலை உடைய பாம்புகளில் தான் வாசுகியாக இருப்பதாக இறைவன் இங்குக்கூறுகின்றார்.]

*அனந்தஸ் சாஸ்மி நாகானாம்*
*வருணோ யாதஸா மஹம்।*
*பித்ருணமர்யமா சாஸ்மி யம:*
*ஸம்யமதாமஹம் ।। (29)*

"நாகங்களில் அனந்தனாகவும், நீர்த்தெய்வங்களில் வருணனாகவும், (தென்புலத்தார் எனும்) முன்னோர்களில் அரியமானவகும், அறவழியிலே யமனாகவும் நான் இருக்கின்றேன்."

[ஐந்து தலைகளையும், விஷமில்லாததாகவும் கூறப்படுவது அநந்தன் எனும் நாகப்பாம்பு ஆகும். இது விஷ்ணுவுக்குப் படுக்கையாகவும், குடையாகவும் திகழ்ந்து, இறைவனின் ஆற்றலாகத் திகழ்கின்றது. தேவர்களில் சிறந்தவனாகவும், நீர் சம்பந்தப்பட்ட தேவர்களுக்குத் தலைவனாகவும், மேற்குத் திசைக்குத் தலைவனாகவும் விளங்குகின்ற அம்சமாக வருணன் விளங்குகின்றான். இறப்பு மூலம் 'பித்ரு லோகம்' எனும் மேலுலகத்திற்குச் சென்ற முன்னோர்களில் முதலாக இருப்பவன் அரியமான் என்பான். ஆகவே அவன் நம் முன்னோர்களில் முதன்மையானவனாவான். ஆதலால் அவனுக்கு மக்கள் முதல்வழிபாடு மேற்கொள்வர். இறைப் பிரதிநிதியாக விளங்கி, மனிதர்களின் பாவ, புண்ணிய பலன்களுக்கு ஏற்ப நடுவுநிலை தவறாது அவர்களுக்கு நன்மை தீமை ஆகிய சுவர்க்கம், நரகம் எனும் வாழ்க்கையைத் தருபவன் யமனாவான். அவன் தென்திசைக்குத் தலைவனாக விளங்கி தர்மத்தின் காவலனாக செயல் புரிகின்றான்.]

*ப்ரஹ்லாதஸ்சாஸ்மி தைத்யானாம்*
*கால: கலயதாமஹம் ।*
*ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோஅஹம்*
*வைநதேயஸ்ச பக்ஷிணாம்।।(30)*

"அசுரர்களில் பிரஹ்லாதானாகவும், கணக்கிடுபவர்களில் காலனா(மா)கவும், விலங்குகளில் சிங்கமாகவும், பறவைகளில் கருடனாகவும் நான் விளங்குகிறேன்."

[காச்யபருக்கும் திதி என்பவளுக்கும் பிறந்தவர்கள் தைத்தியர்கள் எனப்படுகின்றனர். இவர்கள் தேவர்களுக்கு எதிரியாவதால் அசுரர்கள் ஆகின்றனர். அத்தகு அசுரர் குலத்தில் பிறந்தாலும் குப்பையில் மாணிக்கம் போன்று, சிறந்த அறவோனாகவும், சான்றோனாகவும், பக்தனாகவும் பிரஹ்லாதன் விளங்கினான். அத்தகு சிறப்புமிக்கோனைத் தன் அம்சமாக வெளிக்காட்டுகிறார் பகவான். யார் தவறு செய்தாலும், காலம் மட்டும் என்றும் எங்கும் தவறு செய்யாது, முறைபிசகாது தன் கடமையைச் செவ்வனே ஆற்றுகின்றது. ஆகவே சிறந்த கணக்காளியான காலமாகத் தன்னை பகவான் கூறிக் கொள்கிறார். அதேபோன்று ஆற்றலும், பெருமித நோக்கும் கொண்ட சிங்கமாகவும், இறை அம்சமாகக் கருதப்படும் பறவையான கருடனாகவும் தன்னை பகவான் இனம் காட்டுகிறார்.]

*பவன: பவதாமஸ்மி ராம:*
*சஸ்த்ர ப்ருதாமஹம் ।*
*ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸா*
*மஸ்மி ஜாஹ்னவீ ।। (31)*

"தூய்மைப்படுத்துவர்களில் காற்றாகவும், ஆயுதம் ஏந்தியவர்களுள் இராமனாகவும், மீன்களுள் மகரமாகவும், நதிகளுள் கங்கையாகவும் நான் திகழ்கின்றேன்."

[ஐம்பூதங்களுள் காற்றானது எங்கும் எப்போதும் பரவியிருக்கும் தன்மையது. நீர், நெருப்பு, மண் ஆகியன தூய்மையாக இருப்பதற்கும் பிராண வாயு எனும் காற்று தேவையாக உள்ளது. ஆகவே அவ் ஆற்றல்மிகு காற்றாக தான் இருப்பதாக பகவான் கூறுகிறார். கையில் கருவி ஏந்தினால்மட்டும் ஒருவன் வீரனாக மாட்டான். அதனை கையாளும் முறை கொண்டே அவன் தன் திறமை, பெருமை பேசப் பெறும். அக்கருவியினை அவ் வீரன் நல்லோர்க்கு மகிழ்ச்சியையும், தீயோர்க்குத் துன்பத்தையும் வழங்கிடப் பயன் படுத்தும் போதுதான் அவ் வீரனுக்குச் சிறப்பு. அறத்தின் நாயகனான இராமனின் வில்

லும் அறத்தைக் காக்கத்தான் பயன்படுத்தப்பட்டது. இராம னால் அவ்வில்லிற்குப் பெருமை ஏற்பட்டது. அத்தகு கருவி ஏந்திய இராமனாக பகவான் விளங்குகிறார். நீரில் வாழும் மீன் இனமான சுறா பெரும் வலிவு கொண்டதால் மீன்க ளில் அச்சுறாவாகவும், நதிக ளில் எதையும் தூய்மைப்படுத் தும் தெய்வ ஆற்றல்கொண்ட தும், பனி படர்ந்த இமயத்தின் வழிவருவதுமான கங்கையாக வும் தான் இருப்பதாகக் கண் ணபெருமான் கூறுகிறார்.]

ஸர்காணுமாதிரந்தஸ்ச மத்யம்
சைவாஹமர்ஜுன ।
அத்யாத்மவித்யா வித்யானாம் வாத:
ப்ரவததாமஹம் ।। (32)

"படைத்திடும் பொருள்களில் முதல், நடு மற்றும் முடிவாக வும், வித்தைகளில் ஆத்ம வித் தையாகவும், தருக்கம் செய்ப வர்களில் வாதமாகவும் நான் இருக்கின்றேன்."

[உயிரினங்களுக்கு முதல், நடு, முடிவு இருப்பது போன்று அவ் வுயிர் இனங்கள் தோன்ற கார ணமாக அமையும் ஐம்பூதங்க ளுக்கும் முதல், நடு, முடி வாக விளங்குவதாகக் கண் ணன் கூறுகின்றான். அதா வது ஒரு தங்க நகையை செய்வதற்கு முன்னும், உருக் கிய போதும் தங்கம் எனும் மூலப்பொருள் அழியாது விளங் குவது போன்று இறைவன் திகழ்கின்றான். கற்க வேண் டிய தத்துவங்களில் சிறந்தது ஆத்ம தத்துவமாகும். ஆதா வது ஆத்மாவை அறியும் தருணத்து அந்தப் பரமனையே அறிந்தவனாகின்றான். இறை வனை அறிந்தவன் அவ் இறைவனாகவே விளங்குவதால் அந்த ஆத்ம தத்துவமே சிறந் ததாகத் திகழ்கின்றது. தருக் கம் அல்லது வாதிப்பது என் பது உண்மையை அறியும் செயலாகும். இந்த தருக் கமானது வாதம், கல்பம், விதண்டை என்று மூன்று வகை யாகும். இதில் வாதம் என் பது உண்மையை அறிய, விருப்பு வெறுப்பு இன்றி, சீரிய சிந்தனையுடன் வாதிடுவதாகும். ஜல்பம் என்பது தான் கொண்ட கொள்கையை நிலை நிறுத்த எதிர் வாதிடுபவர்களின் வாய டக்கி முரட்டுவாதம் செய் வது. மூன்றாவதான விதண்டை என்பது விதண்டாவாதமாகும். விதண்டாவாதம் செய்பவனுக்கு ஒரு கொள்கையோ, ஈடுபாடோ இருக்காது. பிறர் கொள் கைக்கும் மதிப்பு தரமாட்டான். முறையன்றி பேசி எதிரிகளை பரிகாசம் செய்யும் எண்ணத் தில் வாதிடுவான். ஆகவே வெற்றி தோல்வி எதிர்பார்க் காது உண்மைக்காக வாதிடும் 'வாத'மாக இறைவன் இருக்கின் றான்.]

அக்ஷராணுமகாரோ அஸ்மி
த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச।
அஹமேவாக்ஷய: கால: தாதா ஹம்
விச்வதோமுக: ।। (33)

"எழுத்துக்களில் நான் அகரம்; கூட்டுச் சொல்களிலே இரு சொற்கூட்டு நான்; அழிவற்ற தான காலமும் நான், எங்கும் பரந்து விளங்கி வினைப்பய னைத் தருபவனும் நானே."

['அ' எனும் எழுத்தே நாதபிரம் மத்தின் முதலாகத் தொடங்குகி றது. அவ்வொலியே பல்வேறு வகையாக விளங்கி மற்றைய எழுத்துக்கள் உண்டாகக் கார ணமாகின்றது. 'கூட்டுச்சொல்' வடமொழியில் பயன்படுத்தப்ப டுகின்றன. அத்தகுக் கூட் டுச் சொற்களில் 'இருசொல்' கூட்டாக கண்ணன் திகழ்கின் றானாம். அதாவது 'இரு சொல்' கூட்டாகக் வரும்போது, அவ்விரு சொற்களும் சமமான பொருள் பெருமை பெற்று விளங்குவதாகும். 'இராம கிருஷ்ண அவதாரங்கள்' எனும் போது இராமன் மற்றும் கிருஷ் ணன் எனும் இரு சொற்கள் ஒரே பெருமை பெறுகின்றன. காலம் என்பது வினாடி முதல் கல்பம் (அழிவு) வரை பரந்துள் ளது. ஆனால் அந்த வினா டிக்கு முன்னும், கற்பகத்திற்கு பின்னும் காலம் என்பது இருந் துகொண்டே உள்ளது. ஆகை யால் அது அழிவற்ற ஒரு நிலையாக விளங்குகிறது. ஆகவே இறைவன் அக்காலமா கத் திகழ்கின்றானாம். உயிர்க ளைப் படைத்திடும் அப்பிரம் மனையே இறைவன் படைத் துள்ளான். அப்படைப்பின் மூலம் இறைவன் பல உயிர்க ளாக நடமாடுகின்றான். அவ்வு யிர்களின் மூலம் வினையாற்ற லையும், அதனாற்றான் வினைப் பயனையும் வழங்கி வருகின் றான்.]

(தொடரும்)



## விண்ணப்பம்

'ஸப்தகிரி'யில் வெளியிடப்படும் சமயச் சார்பான கட்டுரைக ளுக்கு அளிக்கப்படும் சன்மானத்தொகை கணிசமாக உயர்த்தப் பட்டுள்ளது. ஆகவே கட்டுரையாசிரியர்கள் தொடர்ந்து தங்கள் முழு ஒத்துழைப்பினை நல்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

--ஆசிரியர்.

# வைகுண்ட ஏகாதசி

திரு. கிருஷ்ண துளஸி - சென்னை.

மார்கழி மாதம் சுக்ல பக்ஷ ஏகாதசி மோக்ஷதா எனப்படும். இதையே வைகுண்ட ஏகாதசி என்றும் கூறுவர். இந்த ஏகாதசி மிகுந்த சிறப்புடையது. இந்த ஏகாதசியில் தாமும் விரதத்தை மேற்கொண்டு, அநுஷ்டித்து, தம்நாட்டு மக்களும் அநுட்டிக்கச்செய்து, அனைவரையும் வைகுந்தமேற்றி உய்வடையச்செய்த ருக் மாங்கத மகாராஜன் அவரது மகன் தர்மாங்கதன் ஆகியோரது வரலாறு நம் நாட்டில் பிரசித்தமானது. சமீபகாலம் வரை வைகுண்ட ஏகாதசி அன்று இரவு கண் விழித்து இருப்பதற்கு உதவியாக ருக்மாங்கதச் சரித்திரம் நாடகமாக விஸ்தாரமாக நடிக்கப்பட்டு வந்தது. இன்றும் சில இடங்களில் நடிக்கப்பட்டு வருகிறது.

மக்கள் வைகறையில் எழுந்து நன்னீராடி, தூய உடை உடுத்து, நாள் முழுவதும் உபவாசம் இருப்பர். திருமால் கோயில்களுக்குச் சென்று வழிபடுவர். இரவு முழுவதும் விழித்திருந்து பஜனை கதாகாலக்ஷேபங்களில் ஈடுபடுவர். இன்று திருமால் திருத்தலங்களில் இவ்விழா கோலாகலமாக கொண்டாடப்படும். இந்த வைகுண்ட ஏகாதசி அன்று உபவாசமிருந்து முறைப்படி விரதம் எடுப்போர் 12 ஆண்டு எல்லா ஏகாதசிகளிலும் முறையாக விரதம் எடுத்து முடித்த பலனைப் பெறுவர் என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

கண்ணன் தன் சோதிவாய் திறந்து அருளிய கீதா சாரத்திரத்தில் மாதங்களில் மார்கழியாவேன் என்று கூறினான். இம்மாதம் கண்ணன் உகந்த வைணவ மாதம். அதிக உஷ்ணமும் அதிகக் குளிரும் அற்று மிதமான சீதோஷ்ணமும் உடையது. இது தேவர்களின் வைகறைப்பொழுது ஆகும். இது அவர்களது அனுட்டான வேளை. சாத்விகமான காலம் ஆகையினால் இம்மாதம் வழிபாட்டிற்கு மிகவும் சிறந்தது. பட்டிதொட்டிகளிலும் நாடுநகரங்களிலும் எல்லாவிடத்திலும் விடியற்காலையில் மக்கள் நன்னீராடி மடி உடையணிந்து பஜனை செய்து வீதிவலம் வருவர். பக்தி உபந்யாஸங்களும் ஆங்காங்கே அதிகமாக நடந்து வருவதைக் காணலாம்.

இம்மாதத்திற்குச் சிறப்பு சேர்ப்பது வைகுண்ட ஏகாதசி விரதமும், உத்ஸவமும் ஆகும். திருமால் திருக்கோயில்களில் அத்யயனோத்ஸவம் நடப்பதும் இம்மாதத்திலேயே. இந்த ஏகாதசிக்கு முன் பத்து நாட்களும், பின் பத்து நாட்களும் அத்யயனோத்ஸவம் கொண்டாடப்படும். முன் பத்துநாட்கள் நடக்கும் உத்ஸவம் பகல் பத்து எனப்படும். இந்நாட்களில் பிராந்திய மொழியில் பக்தர்கள் பாடிய தோத்திரபாக்களை இறைவன் முன்விண்ணப்பிக்கவேண்டும் என்று ஆகமங்கள் கூறும். வைகுண்ட ஏகாதசி தொடங்கி பின் பத்து நாட்களில் கொண்டாடப்படும் உத்ஸவம் இராப்பத்து எனப்படும். இந்த உத்ஸவத்தில் பகற்பொழுதில் நால்வேதங்கள் முழுதும் ஓதப்படும். இந்த இராப்பத்து உத்ஸவத்தில் இரவில் திராவிட வேதங்களாகிய தமிழ்ப் பிரபந்தங்கள் (திருவாய்மொழி) ஓதப்படும்.

பகவான் ப்ரளயார்ணவத்தில் ஆலிலை மேல் பள்ளி கொண்டு, தம்முடைய நாபிக்கமலத்திலிருந்து பிரம்மாவை ஸ்ருஷ்டித்த போது பிரம்மா அஹங்காரம் கொண்டார். உடனே பகவானுடைய காதிலிருந்து இரண்டு அஸுரர்கள் உண்டாகி பிரம்மாவைக் கொல்லலானார்கள். "பிரம்மாவை கொல்ல வேண்டாம். நீங்கள் வேண்டும் வரத்தை நான் கொடுக்கிறேன்" என்றூர் பகவான்.

ராக்ஷஸர்கள்: உனக்கே நாங்கள் வரமளிப்போம்.

பகவான்: இப்படி அஹங்கரிக்கும் நீங்கள் என்னால் கொல்லப்பட்டு ராக்ஷஸர்களாகவே பிறப்பீர்களாக.

ராக்ஷர்கள்: இப்படித் தண்டிக்கக்கூடாது. உம்மோடு ஒரு மாத காலம் சண்டைசெய்து கடைசியில் உம்முடைய அனுக்ரஹத்தினால் நாங்கள் ஸித்தி பெறவேண்டும்.

அப்படி ராக்ஷஸர்கள் ஒரு மாதம் பகவானோடு சண்டை செய்து தோற்றனர். பகவானுடைய வீர்ய சக்தியாதி குணங்களை அறிந்த ராக்ஷஸர்கள் அவரோடு பரமபதத்தில் நித்யவாஸம் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்கள். பகவான் மார்கழி சுக்ல ஏகாதசியன்று உத்தர துவாரத்தைத் திறந்து அவ்வழியாய் அவர்களை அழைத்துக்கொண்டு ஸத்யலோகத்துக்கும் மேலுள்ள பரமபதத்தில் ராக்ஷஸர்களைச் சேர்த்தார்.

அங்கே ஆதிசேசஷன் மேல் வீற்றிருந்து, நித்ய ஸூரிக ளால் சூழப்பட்டிருக்கும் பக வானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை தரிசித்துப் பர மானந்தமெய்திய ராக்ஷஸர்கள் "பிரம்மா முதலான தேவர்க ளும் மற்றவரும் பகவானை அர்ச்சாவதாரமாக பிரதிஷ்டிப் பித்து, 'மார்கழி மாத சுக்லபக்ஷ ஏகாதசி அன்று எங்களுக்குப் பகவான் பண்ணின அனுக்ர ஹத்தை உத்ஸவமாக அனுஷ் டிக்கவேண்டும். அன்று வடக்கு வாசல் வழியாக வெளியே எழுந் தருளும் பகவானை தரிசிப்பவர் களும், பகவானோடுகூட துவா ரத்திலிருந்து வெளியே வருவா ரும் எத்தனை பாபிகளாயிருந் தாலும் மோக்ஷம் பெற வேண் டும்" என்று பிரார்த்தித்தார்கள். பகவானும் அப்படியே அனுக்ர ஹித்தார்.

இந்த வரலாற்றை அனு சரித்து வைகுண்ட ஏகாத சியன்று விடியற்காலம் பக வானை ஸர்வ ஆபரணங்க ளால் அலங்கரித்து, வைகுண்ட வாசலுக்கு எழுந்தருளச்செய்வர். பகவானை ஒரு போர்வை யால் முழுவதும் போர்த்தியி ருப்பர். உத்தரத்வாரமாகிய வைகுண்ட வாசலுக்கு பூஜை கள் செய்து, நான்கு வேதங்க ளும் ஆரம்பிக்கப்படும். திவ்ய பிரபந்தமும் தொடங்கப்படும். பிறகு போர்வை களையப்பெ றும் பெருமாள் ஜகத்ஜோதியாக ஸேவை சாதிப்பர். அதன் பிறகு வைகுண்ட வாசல் திறக் கப்படும். வாத்ய முழக்கங்க ளுடனும், பக்தர்களின் பகவன் நாம முழக்கங்களுடனும் பெரு மாள் வாசலைக் கடந்து அருள் வர். வீடு பெற்ற அரக்கர்கள் ஸ்தானத்தில் பக்தர்கள் கோஷ்டி எம்பெருமான் வழி நடத்த, வைகுண்ட வாசல் வழியாக இறைவனைப் பின்தொடர்ந்து வைகுண்டம் நோக்கி விரைவர். தொடர்ந்து போடப்பட்டிருக் கும் நடைக்கொட்டகையில் பக் தர்கள் ஸேவிப்பதற்காக மெது வாக எழுந்தருளி, ஆயிரக்கால் மண்டபத்திற்கு எழுந்தருள்வர். ஆகமங்கள் ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் ஆயிரம் கால் கள் உள்ள மண்டபத்தில் திவ்ய ஸூரிகள் என்ற அடி யாரகளோடும் சூழ இருக்கிறான் என்று கூறும். அதையொட்டி ஆயிரக்கால் மண்டபமாகிய வைகுண்டத்திற்கு அனைவரை யும் அழைத்துக்கொண்டு எழுந் தருளுவர். இன்று ரத்ன அங்கி, பாண்டியன் கொண்டை யோடு ஸேவை ஸாதிப்பது அன்று அசுரர்களுக்குக் காட்சிய ளித்த பிரகாரத்தை நினைவூட் டவேயாம். இந்த மண்டபத்தில் பக்த பிம்பங்கள் அலங்காரமாய் பகவானுக்கு எதிரே எழுந்தரு ளிவிக்கப்பட்டிருப்பர்.

கர்ப்பகிரகத்திலிருந்து பரம பத வாசல்வரை பனிமுட்டாக் குடன் வருவது இறைவன் தானே ஜீவனாக நடிப்பது ஆகும். மோக்ஷத்துக்கு செல் லும் ஜீவன் பிரக்ருதி மண்ட லத்தை (இம்மை உலகு) தாண் டும் வரை வலிமையான, இதன் சக்தியினால் மீண்டும் இழுக்கப் படுவானோ என்ற அச்சத் தினாலும், பாதுகாப்பு நடவ டிக்கையாகவும் ஜீவனை ஞான சக்தியாலாகிய போர்வையால் அணைத்துக்கொண்டு, ப்ரக் ருதி மண்டலம் தாண்டியவுடன் போர்வையாகிய இப்பாதுகாப் பைக் களைந்து விடுகிறான் என் பதை அறிவிப்பதாம். இப் படி ஒரு ஜீவன் மோக்ஷத் துக்கு செல்லும் வழியினைக் குறித்தும், மோக்ஷத்தில் இன் பம் துய்ப்பதை விளக்கி யும் கொண்டாடப்படும் உத்ஸ வம் இது. கருவறையிலிருந்து வைகுண்டவாசல் வரை இருப் பது பிரகிருதி மண்டலமாகும். வாசல் தாண்டியதும் வைகுந்த நகர் தொடங்குகிறது. ஆயிரக் கால் மண்டபமே பரமபதம் முன் னேயுள்ள நெடுதுயர்ந்த கொட் டகை திவ்யகாந்தாரம் சாத் தியிருக்கும் பரமபதவாசலுக்கு முன் உள்ள துரை மண்டபம் விரஜாநதி. இங்கு அமான

| இடம் | முதல் - வரை | மொத்தத் திருமொழிகள் |
|---|---|---|
| 1. திருநறையூர் | 6:4 - 7:3 | 10 |
| 2. திருக்கண்ணபுரம் | 8:1 - 8:10 | 10 |
| 3. திருவரங்கம் | 5:4 - 5:8 | 5 |
| 4. திருவேங்கடம் | 1:8 - 2:1 | 4 |
| 5. திருவழுந்தூர் | 7:5 - 7:8 | 4 |
| 6. திருவாலி | 3:5 - 3:7 | 3 |
| 7. திருவிண்ணகர் | 6:1 - 6:3 | 3 |
| 8. திருக்கடல்மல்லை | 2:5 - 2:6 | 2 |
| 9. திருச்சித்திரகூடம் | 3:2 - 3:3 | 2 |
| 10. திருப்புல்லாணி | 9:3 - 9:4 | 2 |
| 11. திருக்குறுங்குடி | 9:5 - 9:6 | 2 |
| 12. திருமாலிருஞ்சோலை | 9:8 - 9:9 | 2 |

வன் என்ற தேவனால் தீண்டப் படுகிறுன். எஞ்சியிருந்த சிறிது ரஜோகுணத்தை விரிஜை ஸ்நானம் போக்கி விடுகிறது. இந் நதியைக் கடந்து பரமவாசல் வழியாக நடைக்கொட்டகையாகிய அர்சிராதிமார்க்கத்தால் வைகுந்தம் அடைகிறுன். இந்த ரீதியைப் பெருமாள் இன்று முதல் பத்துநாட்களுக்கு அனுகரிக்கிறுர்.

இராப்பத்து பத்தாவது நாள் திருவாய்மொழி ஓதுதல் பூர்த்தியடையும். இன்று நம்மாழ்வாராகிய ஜீவன் முக்திப்பேற்றையடைந்தநிலை அனுகாரம் செய்யப்படும். பெருமாள் திருவடிகளில் ஆழ்வாரை எழுந்தருளப்பண்ணி, துளஸிக்கொழுந்துகளை அவர்மீது குவித்து மறைப்பர். திருவாய்மொழி கடைசிபத்து பாட்டுகள் உரத்த குரலில் சேவிக்கப்படும். பக்தர்கள் மெய்ம்மறந்து இருப்பர். இதுவே ஆழ்வார் மோட்சம் எனப்படும். இப்படி ஒரு ஜீவன் வீட்டுப்பேறு பெறும் வகையினை விளக்கிக் காட்டும் இந்தப்பெருவிழாவை, பொருள் உணர்வுடன் காண்பரேல் பேரின்பம் எய்துவர்.

★★★★★

திருப்பதியிலிருந்து

## இரயில் கால நேர விவரங்கள்

### அகல இருப்புப்பாதை

| இரயில் எண். | புறப்படும் நேரம் | சேரும் இடம் | இரயில் பெயர் |
|---|---|---|---|
| 475 | 23-30 | காகினாடா | காகினாடா பிரயாணி வண்டி |
| 217 | 22-00 | மைசூர் | மைசூர் பிரயாணி வண்டி |
| 7425 | 18-30 | செகந்திராபாத் | நாராயணுத்ரி விரைவு வண்டி |
| 7487 | 19-00 | விசாகப்பட்டினம் | திருமலா விரைவு வண்டி |
| 7430 | 15-30 | ஹைதராபாத் | ராயலசீமா விரைவு வண்டி |
| 6054 | 10-05 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 559 | 14-15 | ஓங்கோல் | ஓங்கோல் பிரயாணி வண்டி |
| 7489 | 13-45 | | வாரணுஸி விரைவு வண்டி (செவ்வாய்க்கிழமை) |
| 7490 | 13-45 | கொச்சி | கொச்சின் விரைவு வண்டி (ஞாயிற்றுக்கிழமை) |
| 7491 | 13-45 | வாரணுசி | வாரணுஸி விரைவு வண்டி (புதன்/வெள்ளிக்கிழமை) |
| 8480 | 9-45 | பூரி | பூரி விரைவு வண்டி |
| 6058 | 17-30 | சென்னை | ஸப்தகிரி விரைவு வண்டி |
| 6208 | 6-30 | ஹைதராபாத் | கடப்பா விரைவு வண்டி |
| 529 | 6-55 | கூடூர் | கூடூர் பிரயாணி வண்டி |
| 7405 | 5-30 | ஹைதராபாத் | கிருஷ்ணு விரைவு வண்டி |
| 196 | 4-05 | அரக்கோணம் | அரக்கோணம் பிரயாணி வண்டி |

### குறுகிய இருப்புப்பாதை

| இரயில் எண். | புறப்படும் நேரம் | சேரும் இடம் | இரயில் பெயர் |
|---|---|---|---|
| 6799 | 15-40 | மதுரை | மீனாட்சி விரைவு வண்டி |
| 247 | 6-00 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 157 | 10-30 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 7598 | 14-40 | மெஹபூப்நகர் | வெங்கடாத்ரி விரைவு வண்டி |
| 187 | 17-30 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 191 | 7-00 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |
| 287 | 21-45 | குண்ட்டக்கல் | குண்ட்டக்கல் பிரயாணி வண்டி |
| 643 | 8-45 | காட்பாடி | காட்பாடி பிரயாணி வண்டி |

# சிறிய திருவடி

டாக்டர்: கே.எஸ். நாராயணன் - திருநெல்வேலி.

எப்பொழுதும் திருமாலுடனிருந்து அப்பெருமானுக்கு வாகனமாய் அமைந்து தொண்டு செய்தலால் கருடனுக்குப் பெரிய திருவடி எனவும், இராமாவதாரத்தில் மட்டும் உடனிருந்து சேவை செய்ததால் அநுமானுக்குச் சிறிய திருவடி எனவும் வைஷ்ணவ சம்பிரதாயம் கூறுகிறது.

அநுமானுக்குச் சுந்தரன் என்ற பெயர் உண்டு. அவன் செயல்கள் யாவுமே அழகு வாய்ந்தவை.

பொன்னிறத்தும்பி செவியில் இன்னிசையை ஊதிச் செல்வதுபோல் ராமன் தன்னை மீட்க வருவான் என்ற நம்பிக்கை ஒன்றை மட்டுமே கொண்டு அவனைத்தேடி திக்கெட்டுகளையும் கண்களால் அளந்து கொண்டு உயிர் வாழ்ந்து வந்த சீதாபிராட்டிக்கு 'ராமன் வருகிறான் மீட்க' என்ற நற்செய்தியையும் ஆறுதலையும் ஒருங்கே அளித்தவன் அநுமன்.

கேசரி என்ற வானரனின் மனைவியான அஞ்சனாதேவியிடத்து அரக்கர்களை அழிக்க உதவுதற்காக வாயுதேவனது அருளால் ருத்திரன் அம்சமாகப் பிறந்தவன் ஹனுமான். பிறந்ததும் தாயைப் பார்த்து தனக்கு உணவு எது எனக் கேட்கத் தாய் செந்நிறப்பழங்கள் யாவும் எனக்கூறினாள். அதுகேட்டதும் அப்பொழுது தான் கீழ்த்திசையில் உதயமாகிக் கொண்டிருந்த செந்நிற இளஞ்சூரியனைக் கனிந்த ஒரு பழம் என எண்ணி அதைப் பறிக்கப் பாய்ந்தபோது இந்திரன் கோபம் கொண்டு தனது வச்சிராயுதத்தால் தாக்கவே கன்னம் சிதைந்தது. வடமொழியில் ஹனு என்றால் கன்னம் எனப்பொருள். எனவே அஞ்சனையின் புதல்வன் ஹனுமான் (தமிழில் அநுமன்) என வழங்கப்பெற்றான். பிறந்தவுடனே ஆற்றலை வெளிப்படுத்தியவன் அநுமன்.

வாமனாவதாரத்தில் திருமால் தனது காலினால் அளந்த வானுலகை ஹனுமான் தனது வாலினால் அளந்தான். இலங்கைக்குச் செல்லக் கடலைத் தாவியபோது, உருபெருக்குவதும் உருசுருக்குவதும் அவனுக்குக் கைவந்த கலை. நற்றாயினும் நல்லவன்; உள்ளபடி உண்மையை விளங்கக்கூறுபவன்; அறத்தின் வழி நிற்பவன்; (சீதையை) இட்டுவா என்றபோது (இலங்கையைச்) சுட்டு வந்தவன்; (சஞ்சீவி மூலிகையை) வெட்டிவா என்றபோது அடியோடு பெயர்த்து வந்த தீரன் ஹனுமான்.

ஆறுசுவைகளுக்கு அப்பால் ஏழாவது சுவையாக அன்பைக் கூறுவர். அன்பு இல்லாமல் வழங்கப்படும் அறுசுவை உணவை யார் விரும்பி உண்பர்? ஸ்ரீராமனிடத்தில் வற்றாத, முழுமையான அன்பு கொண்டவர் ஆஞ்சநேயர்.

அறிவு என்பது காலத்திற்கேற்றாற்போல் உணரும் உணர்ச்சி. இந்த அறிவுத்திறன் ஹனுமானின் ஒவ்வொரு செயலிலும் வெளிப்படக்காண்கிறோம் ராமாயணத்தில்.

சொல்லின் செல்வன் அவன்; அதாவது சொல் வன்மை மிகுந்தவன். எந்தச் சமயத்தில் எதை எவ்வாறு சொல்லவேண்டுமோ அதைச் சமயோசிதமாகச் சொன்னவன் ஹனுமான்.

பல பெண்களைக் கண்டபோதும் மனம் பேதலிக்காமல் தூய்மையே உருவான பிரம்மச்சாரி; பகைவர்களுக்கு நடுவில் அஞ்சாமல் தனது தலைவன் ராகவனின் வீரதீர பராக்கிரமங்களை எடுத்துரைத்த துணிவு உடையவன்; உண்மையே பேசி வாய்மை காத்தவன். ராமனின் நண்பர்கள் அனைவரும் அவனுக்கு நண்பர்கள்.

தூதுவனின் லட்சணங்களாகக் கூறப்படும் அன்பு, அறிவு, சொல்வன்மை, தூய்மை, துணிவுடைமை, வாய்மை, நட்புரிமை ஆகிய அனைத்தும் கொண்டவன் ஹனுமான்.

“கருநிறத்தழகனுக்கமைந்த காந்தை”யை அசோக வனத்தில் கண்டபோது ராமன் தன்னிடம் சொல்லியனுப்பிய குணங்களும் லட்சணங்களும் இவளிடம் பொருந்துகின்றன; எனவே இவள்தான் தேடிவந்த சீதையே என உறுதிசெய்து சீதையிடம் கணையாழி கொடுத்து பிறகு அவளிடமிருந்து சூளா

மணியைப் பெற்றுக்கொண்டு மீண்டும் கடல் தாவி ராமனைக் கண்டதும் முதலில் சொல்வது "கண்டேன் கற்பினுக்கணியைக் கண்களால்" என்ற நல்வார்த்தைகள்தான். அமுதவார்த்தைகளைத் தேர்ந்தெடுத்துச் சொல்கிறுன் ஹனுமான்.

இராவணன் சீதையை தன்னை மணந்து கொள்ளுமாறு வற்புறுத்துவதையும் சீதை அவனை நிந்தித்துப் பேசுவதையும் அசோக வனத்து மரம் ஒன்றின் மீதிருந்து காண்கிறுன் ஹனுமான். இராவணனால் சீதாபிராட்டிக்கு ஏதேனும் தீங்கு நேரலாம் என எண்ணி அஞ்சிய ஹனுமான் அச்சமயம் வேறு எதுவும் செய்யத் தோன்ருமல் இவ்வாறு வாழ்த்த ஆரம்பிக்கிருன்.

"வாழி சானகி வாழியிராகவன்
வாழி நான்மறை வாழிய ரந்தணர்
வாழி நல்லற மென் றென்று
வாழ்த்தினான்
ஊழி தோறு முயர் வுறுஞ்
சீர்த்தியான்"
-(நிந்தனைப்படலம்-
கம்பராமாயணம்)

ஹனுமானது நல்லெண்ணமும், சமயோசித புத்தியும் அழகாக வெளிப்படுகிறது இங்கு.

தேகபலம், புத்திபலம், விநயம், பக்தி ஆகியவற்றைப் பூரணமாகப் பெற்றவர் ஆஞ்சநேயர். எல்லாம் ஸ்ரீராமன் இட்ட பிச்சை என்ற அடக்கத்துடன் ராமதாசனாகவே வாழ்ந்தவர் அவர்.

அர்ச்சுனனது தேர்க்கொடியில் இருந்து வெற்றிக்கு வழி வகுத்தவர் ஹனுமார். ஆஞ்சநேயரின் அவதாரமாகத்தான் ஸமர்த்த ராமதாஸ் ஸ்வாமிகள் தோன்றி தர்ம ஸ்தாபனம் செய்தார் எனக்கூறப்படுகிறது.

சனிபகவானின் உக்கிரத்தைக் குறைக்கும் சக்தி ஸ்ரீஆஞ்சநேயருக்கு உண்டு.

"அஸாத்திய ஸாதக ஸ்வாமின்
அஸாத்தியம் தவகிம் வத
ராம தூத க்ருபா ஸிந்தோ
மத்கார்யம் ஸாத்ய ப்ரபோ"

என்ற ஸ்லோகத்தைத் தினம் கூறிவந்தால் ஆஞ்சநேயர் அருளால் சனியின் தீவிரம் குறையும் என்பர்.

ஆஞ்சநேயர் விக்கிரங்கள் கோவில்களில் சிறிய அளவில் இருந்து மிகப்பெரிய அளவு வரை உள்ளன. கன்னியாகுமரி மாவட்டத்து சுசீந்திரம் ஸ்தாணுமாலய ஸ்வாமி கோயிலில் உள்ள ஹனுமார் விக்கிரகம் மிகப்பெரியது; அழகானதுகூட.

"ராம ராம" என்று எங்கெல்லாம் ராமநாமம் பேசப்படுகிறதோ அங்கெல்லாம் யார் கண்ணுக்கும் தெரியாமல் இருந்துகொண்டு ஆனந்த பாஷ்யம் கொட்டிப் பரவசப்படுவர் ஹனுமார்.

ஸ்ரீராம நவமி உற்சவங்களில் கடைசிநாள் ஹனுமத் ஜெயந்தி உற்சவம் எங்கும் கொண்டாடப்படுகிறது.

தங்கள் மனோரதம் (இச்சை) நிறைவேற விநாயகரை வேண்டிக்கொண்டு செயலை ஆரம்பித்தவர்கள் அது நிறைவேறியதும் ஸ்ரீஆஞ்சநேயருக்கு வெண்ணெயும், வடைமாலையும் சாற்றி வழிபடுகின்றனர். இதனால்தான் 'பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது' என்ற சொற்றொடர் வழக்கத்தில் உள்ளதுபோலும்.

"அஞ்சிலே ஒன்றுபெற்றுன் அஞ்சிலே
ஒன்றைத்தாவி
அஞ்சிலே ஒன்று ஆருக ஆருயிர்
காக்க ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்
கண்டுஅயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன்
எம்மையளித்துக் காப்பான்"



## உதயாஸ்தமான ஸர்வ சேவா அறக்கொடை திட்டம்

| | நன்கொடை ரூ. |
|---|---|
| வெள்ளிக்கிழமை தவிர்த்து மற்றைய எந்த நாளாயினும் | 1,00,000/- |
| வெள்ளிக்கிழமைகளில் | 3,00,000/- |

நன்கொடையாளரைச் சார்ந்தவர்கள் (மொத்தம் 6 நபர்கள்) காலை சுப்ரபாதம் முதற்கொண்டு ஏகாந்த சேவை வரையிலான எல்லா சேவைகளுக்கும் குறிப்பிட்ட நாளன்று அனுமதிக்கப்படுவர். அன்று நடைபெறும். மற்றைய ஆர்ஜித சேவைகளை கண்டு களிக்கவும் அனுமதிக்கப்படுவர்.
அன்பளிப்பு : ஒவ்வொரு ஆண்டும் ஒரு கல்யாணோத்ஸவ வஸ்த்ரம், 25 லட்டுகள், 5 வடைகள் வழங்கப்படும்.

# செய்திச்சுருக்கம்

தி.தி. தேவஸ்தானத்தாரின் தாஸ ஸாகித்ய திட்டத்துறையின் சார்பில் கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த 42 பஜனைக் குழுவினர் கலந்துகொண்ட படிவிழா எனும் சிறப்பு நிகழ்ச்சி 25-12-95 அன்று வெகுவிமர்சையாக நடைபெற்றது. இது சம்பந்தமாக திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் நடைபெற்ற சிறப்பு விழாவில் பெஜாவர் மடத்தின் தலைவர் ஸ்ரீஸ்ரீவிஸ்வேஷ தீர்த்த சுவாமிகளும், பலிமாரு மடத்தின் தலைவர் ஸ்ரீஸ்ரீவித்யாதீஷ சுவாமிகளும் பங்கேற்றுத் தற்போதைய பிரச்சனைகள் சூழ்ந்த சமுதாயத்தில் சமய உணர்வு ஒன்றே சிறந்த வழிகாட்டி என்றும், பக்தி இயக்கத்தின் இன்றியமையாமையையும் குறிப்பிட்டுப் பேசினர். இதுபோது இரண்டு கன்னட பக்தி நூல்கள் வெளியிடப்பட்டன. 25-12-95 அன்று நடைபெற்ற பஜனை ஊர்வலத்தில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர், இணை செயலாட்சித் தலைவர், மக்கள்தொடர்பு அலுவலர் ஆகியோர் பங்கேற்றனர். 26-12-95 அன்று அலிபிரி எனும் திருமலை அடிவாரத்தில் 'படிபூஜை' மேற்குறிப்பிட்ட சுவாமிகளால் நடைபெற்றது. பிறகு அலிபிரியிலிருந்து சுமார் 2500 பக்தர்கள் கலந்துகொண்ட பஜனைக்குழுக்கள் திருமலைக்கு நடந்துசென்றனர். இப்படிவிழா ஒட்டி திருமலையில் ஆஸ்தான மண்டபத்தில் பத்ரகிரியைச் சார்ந்த அச்சுததாஸரின் 'ஸ்ரீநிவாசகல்யாணம்' எனும் பொருள்பற்றி ஹரிகதை நிகழ்ச்சி பக்தர்களை வெகுவாகக் கவர்ந்தது.

* * *

## திருமலையில்...

ஆந்திரமாநில முதல்வர் திரு. என். சந்திரபாபுநாயுடு அவர்கள் 15-12-95 அன்று திருமலைக்கு வருகை புரிந்து 'நிஜபாதசேவை' எனும் திருமலைக் கோயில் நிகழ்ச்சியில் கலந்துகொண்டு, இறைவனைத் தரிசித்தார். அதற்குமுன்பாக திருமலை கோயில் ரங்கநாயக மண்டபத்தில் முதல்வர் வேத மந்திரத்துடன் எதிர்கொள்ளப்பட்டு, தி. தி. தேவஸ்தான செயலாட்சித்லைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்களால் வரவேற்கப்பட்டார். பின்னர் தரிசனத்திற்குப்பிறகு கோயில் பிரஸாதங்கள் முதல்வர்க்கு வழங்கப்பட்டன.

* * *

## மற்றைய செய்திகள்

அண்மையில் திருமலையில் கூடிய தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:



தி.தி. தேவஸ்தான அச்சகத்தில் பணிபுரியும் ஊழியர்களின் ஓய்வுக்காலத்தை, ஆந்திரமாநில அரசு அச்சக ஊழியர்களுக்கு ஒப்பாக, 58லிருந்து 60ஆக உயர்த்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. தனது முடிவை அரசு ஒப்புதலுக்காக ஆந்திர மாநில அரசுக்கு அனுப்பவும் குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதி - திருமலை நடைபாதையில் உள்ள காலி கோபுரத்தினை ரூ. 3.75 இலட்சம் செலவில் பழுதுபார்ப்பதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஸ்ரீகாஞ்சி மடத்தின் தலைவரான ஸ்ரீஜெயந்திர சுவாமிகளின் ஆலோசனைப்படி, மேகாலயாவில் தியான மண்டபம் ஒன்றினை அமைத்திட குழு முடிவுசெய்துள்ளது.

* * *

## புத்தாண்டு முதல் நாள்

பொதுவாக ஆண்டின் முதல் நாளான ஜனவரி முதல் தேதியன்று திருமலைக்கு வரும் பக்தர்களின் கூட்டம் ஆயிரக்கணக்கில் இருக்கும். இம்முறை அந்நாளன்று 'வைகுண்ட ஏகாதசி' எனும் திருநாளும் வந்துமைந்ததால் பக்தர்களின் எண்ணிக்கை மேலும் கூடியது. வழக்கம் போல் தேவஸ்தானம் தகுந்த ஏற்பாடுகளை மேற்கொண்டாலும் இம்முறை வண்ண மின்விளக்கு அலங்காரங்களாலும், மலர்களால் அமைக்கப்பட்ட கடவுளர்களின் திருவுருவ அமைதிகளாலும், இன்னிசை நிகழ்ச்சிகளாலும் சற்றே மெருகு கூடி ஜொலித்தது. மேலும் தரிசனத்திற்காக 'க்யூ' எனும் நீண்ட வரிசைகளில் பலமணி நேரங்கள் நின்று வந்த யாத்திரிகப் பொதுமக்களுக்கு இலவச தேநீர் மற்றும் உணவுப் பொட்டலங்கள் வழங்கப்பட்டன.

* * *

## முதலாண்டு நிறைவுவிழா

இறைவனாலேயே அணுக்கத் தொண்டராக நியமிக்கப்பட்ட திருமலைநம்பி, திருமலையில் ஆகாசகங்கை எனும் சுனையிலிருந்து நாளும் தூயநீர் சுமந்து வந்து ஏழுமலையானுக்கு 'தீர்த்த கைங்கர்யம்' செய்து வந்தார். அத்தொண்டரின் வழிவந்தோர் 31-1-94 அன்று 'திருமலைநம்பி' பெயரில் அறக்கட்டளை ஒன்றினை நிறுவி, அதனை 3-7-94 அன்று திறந்த வைத்தனர். காலம் காலமாக நடைபெற்று கொண்டு வரும் ஆகாசகங்கை தீர்த்த கைங்கர்யம், தோமால சேவை மந்த்ர பூஜை கைங்கர்யம், வேத பாராயண கைங்கர்யம் மற்றும் கோயில் சமயநிகழ்ச்சி சம்பந்தமான கைங்கர்யங்கள், திருமலை சாத்துமுறை போன்றன நடைபெறச்செய்யவே இந்த அறக்கொடைகுழு துவக்கப்பட்டது. மேலும் வேத வகுப்புகளை நடத்திடவும், திருமலை நம்பி உள்ளிட்ட ஸ்ரீராமாநுஜர் ஸ்ரீவேதாந்த தேசிகர் போன்ற ஆசார்யபெருமக்களின் பெருமையினை விளக்கிடவும் இக்குழு, தன் குறிக்கோள்களாக மேற்கொண்டுள்ளது. இத்தகுச் சிறப்பும் பெருமையும் கொண்ட திருமலைநம்பியின் பெயரில் துவக்கப்பட்ட 'திருமலைநம்பி ஸ்ரீவேங்கடேஸ்வரா கைங்கர்யம் மற்றும் அறக்கொடை' குழுவின் முதலாண்டு நிறைவுவிழா வெகு விமர்சையாகத் திருச்சானூரில் அண்மையில் கொண்டாடப்பட்டது.

இவ்விழாவிற்கு தலைமை விருந்தினராக பங்கேற்று உரையாற்றிய தி.தி. தேவஸ்தான



அண்மையில் தி.தி. தேவஸ்தான அச்சக வளாகத்தில் நடைபெற்ற 'ஸ்ரமதான்' எனும் 'சுற்றுப்புறசூழல் காத்தல்' எனும் இயக்கத்தின் கீழ் அச்சக ஊழியர்கள் பங்கேற்றபோது.

செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார் அவர்கள் ஸ்ரீராமானுஜரின் நியமன திருமலை ஒழுகுபடி சமயச்சடங்குகள் இன்றுவரை திருமலைக்கோயிலில் பின்பற்றப்பட்டு வருகின்றன என்று குறிப்பிட்டு, இன்றுவரை திருமலைக்கோயிலில் தீர்த்த கைங்கர்யம் செய்துவரும் திருமலைநம்பி சந்ததியினரின் கோயில் ஈடுபாட்டினை வெகுவாகச் சிறப்பித்துக்கூறினார். மேலும் அவர்கள் சந்ததியினர் கோயிலுக்குள் சென்றுவர அவர்களுக்கு அடையாள அட்டைகள் வழங்கப்படும் என்றும் உறுதி அளித்தார். இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக பங்கேற்று உரையாற்றிய ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் திருமலை நம்பிகளின் வைணவத் தொண்டினைப் பாராட்டி ஆகமங்களில் பெருமையாகக் குறிப்பிடப்படும் 'தீர்த்த கைங்கர்யம்' எனும் 'புனிதநீர் சேவை'யே இறைத்தொண்டில் முக்யமாகக் கருதப்படுகிறது என்று கூறினார். தொடர்ந்து 'யுவ சேவக் சபா'வினரால் பிரசுரிக்கப்பட்ட வேதாந்த தேசிகரின் 'ஸ்ரீஸ்துதி' எனும் நூலினை இவ்விழாவை ஒட்டி ஆண்டவன் சுவாமிகள் வெளியிட்டார். திருப்பதி மற்றும் திருமலை ஜீயர் சுவாமிகளும் இவ் விழாவில் பங்கேற்று வாழ்த்துரை வழங்கினார்கள். இவ் அறக்கொடை சார்பில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் ரூ. 10,000ஐ நன்கொடையாக ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகளுக்கு வழங்கினார். பின்னர் தற்போதுள்ள திருமலை நம்பி சந்ததியினரில் மூத்தவரான திரு. டி.கே. ரங்கசுவாமி அவர்கள் இவ்விழாவில் கௌரவிக்கப்பட்டார். இவ்விழாவில் பல்வேறு நிலைகளில் திருவாளர்கள் டி.கே. சேஷாத்ரி, டி.கே. செல்லப்பா, டி.கே. ராஜகோபால் மற்றும் எம். துரைராஜ் ஆகியோர் பங்கேற்றனர்.



## ஆர்ஜித சேவை விவரங்கள்

## தினசரி சேவைகள்

| சேவை | கட்டணத் தொகை ரூ. | அனுமதிக்கப் படும் நபர்கள் எண்ணிக்கை | அனுமதிக்கப் படும் நேரம் (மாறக்கூடியது) |
|---|---|---|---|
| I | | | |
| 1. சுப்ரபாத தரிசனம் | 100/- | 1 | காலை 2-30 மணி |
| 2. தோமால சேவை | 200/- | 1 | காலை 3-30 மணி |
| 3. அர்ச்சனை | 200/- | 1 | காலை 4-30 மணி |
| 4. தோமால சேவை மற்றும் அர்ச்சனை (வெள்ளிக் கிழமைகளில்) | 400/- | 1 | காலை 6-30 மணி |
| 5. அமந்த்ரணோத்ஸவம் | | | |
| வெள்ளிக்கிழமைகளில் | 600/- | 1 | காலை 6-30 மணி |
| மற்றைய நாட்களில் | 600/- | 1 | காலை 3-30 மணி |
| 6. நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைதோறும்) | 100/- | 1 | காலை 5-30 மணி |
| 7. சிறப்பு நுழைவு சீட்டு | 30/- | 1 | சர்வ தரிசன அனுமதியின் போது |
| 8. ஏகாந்த சேவை | 100/- | 1 | இரவு 10-30 மணிக்குப்பிறகு |

குறிப்பு:-

1) வரிசை எண் 1 முதல் 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பேயே முன்பதிவு செய்துகொள்ளலாம்.
2) சிறப்பு நுழைவு மற்றும் ஏகாந்த சேவை சீட்டுக்களுக்கு முன்பதிவு கிடையாது.
3) ஏகாந்த சேவைகளுக்கான சீட்டுகள் ஸர்வ தரிசனத்திற்குப் பிறகு இரவு 10-30 மணிக்குமேல், ஒதுக்கப்படும் சீட்டுக்களைப் பொறுத்து விற்கப்படும்.



Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

